॥ ஸ்ரீ: ॥

பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யரான

ஸ்ரீஉத்திராதிமடம் பீடாதிபதி

ஸத்ஸத்யத்யான தீர்த்தஸ்வாமிகள்

அருளிச்செய்த

# ஸ்ரீ கீதாதத்வம்.



கும்பகோணம்

தத்வமித்திரன் பத்திரிகையின் ஆசிரியர்

(ஆத்யம்) பாகவத ரங்கநாதாசாரியரால்

தமிழில் எழுதப்பட்டு



திருப்பதி

தத்வஸித்தாந்த அபிவிருத்திகாரிணீ ஸபையால்

வெளியிடப்பட்டது.

I-வது ஸஞ்சிகை.

கோமளாம்பா பிரஸ், கும்பகோணம்.

1931

|| श्री ॐ श्री ||

श्रीमद्धनुमद्भीममध्वांतर्गत श्रीरामकृष्णवेदव्यासाय नमः ||

# ஸ்ரீ கீதா தத்வம்.



இஃது

ஸ்ரீ 108 ஸ்ரீமத் ஸத்யத்யானதீர்த்தஸ்வாமிகளின்
மகாஸன்னிதானத்தில் மைசூர்
ஸ்ரீவேதாந்தவிமரிசினீசபையில் ஆராய்ச்சிபெற்ற

## விஷயங்களின் ஸாராம்சம்.

---

ப்ரமோதூதஸம்வத்ஸரம்

ஆஷாடகிருஷ்ண ஸப்தமி சுக்ரவாரம் 18—7—30
அஷ்டமி சனிவாரம் 19—7—30
நவமி பானுவாரம் 20—7—30

வினு கேட்டவர்கள்: பல வித்வான்களும் வித்யார்த்திகளும்

---

வினு 1:— மகாஸ்வாமி! தாங்கள் தயவுசெய்து ஸ்ரீமத்வமதம் எல்லா மதங்களைவிட மேலானதென ஸ்ரீமத் பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அருளிய மொழிகளை ஆதாரமாகக் கொண்டே நிரூபித்துக்காட்டுவீர்களாக.

**ஸ்ரீஸ்வாமிகள்:—** அப்படியே ஆகட்டும். எங்கள் மதத்தின் எல்லா ப்ரமேயங்களையும் ஸ்ரீவியாஸராஜஸ்வாமிகள் ஒரே சுலோகத்தில் ஸங்கிரஹித்துச் சொல்லியுள்ளார். அது யாதெனில்

श्रीमन्मध्वमते हरिः परतरः सत्यं जगत्तत्वतो
भिन्ना जीवगणा हरेरनुचरा नीचोच्चभावं गताः ।
मुक्तिर्नैजसुखानुभूतिरमला भक्तिश्च तत्साधनं
ह्यक्षादि त्रितयं प्रमाणमखिलाम्नायैकवेद्यो हरिः ॥

ஸ்ரீமன் மத்வமதே ஹரி: பரதர: ஸத்யம் ஜகத்தத்வதோ
பின்னு ஜீவகணு ஹரோனுசரா நீசோச்சபாவம்கதா: ।
முக்திர்நைஜஸுகானுபூதிரமலாபக்திஸ்சதத்ஸாதனம்
ஹ்யக்ஷாதித்ரிதயம் ப்ரமாணமகிலாம்னுயைக வேத்யோ ஹரி: ॥

ஸ்ரீமத்வமதத்தில் அடியிற்கண்ட ஒன்பது ப்ரமேயங்கள் வெகு முக்கியமானவை. (i) ஸ்ரீஹரிதான் ஸர்வோத்தமர், (ii) இந்த ஜகத் ஸத்யம், (iii) பாரமார்த்திகமான பஞ்சபேதங்களுண்டு, (iv) ஜீவர்கள் ஸ்ரீவிஷ்ணுவின் அடியார்கள். (v) ஜீவர்கள் ஒருவர்க்கொருவர் தாரதம்மியமுள்ளவர்கள், (vi) முக்தியென்பது அவரவர்களின் ஸ்வரூபாநந்தம் வெளியாதல், (vii) முக்திக்கு ஸாதனம் பக்தியே, (viii) ப்ரத்யக்ஷம் அனுமானம் ஆகமம் இவைகள் ப்ரமாணம், (ix) எல்லா வேதங்களாலும் நிரூபிக்கப்படுகிறவர் ஸ்ரீஹரி. ஆக இந்த ஒன்பது விஷயங்களை நாளொன்றுக்கு ஒவ்வொரு விஷயமாக கிரமமாய் நாம் உபன்யஸித்துவந்தால் ப்ரமேயநவமாலிகா இயற்றப்பட்டதாகும்.

இன்று ஸ்ரீவிஷ்ணுதான் ஸர்வோத்தமரென்பதை ஸ்ரீகிருஷ்ண பகவானின் வாக்யங்களைக்கொண்டே நிரூபித்துக்காட்டுகிறோம்.

## (i)

## ஸ்ரீ விஷ்ணுதான் ஸர்வோத்தமர்.

ஸ்ரீமத் பகவத்கீதையில் ஸ்ரீவிஷ்ணு ஸர்வோத்தமரென்பதை அறிவிக்கும் வாக்யங்கள் இருவகையாகத்தோன்றியிருக்கின்றன. ஒரு சில வாக்யங்களில் ஸ்ரீகிருஷ்ணர் "நானே ஸர்வோத்தமன்" என்று ஸ்பஷ்டமாக ப்ரத்தியக்ஷமாய்ச் சொல்லிக்கொண்டிருக்கிறார். வேறு சில வாக்யங்களிலோ அவர் ஸர்வோத்தமரென அறிவிக்கத் தகுந்ததாயுள்ள யுக்திகளை எடுத்துக்காட்டியிருக்கிறார். தவிரவும் ஞானிகள் ஸ்ரீவிஷ்ணு ஸர்வோத்தமரென்பதை ப்ரத்யக்ஷமாய் கண்டுகொண்டிருக்கின்றனர். அதாவது இந்த விஷயத்திற்கு ஞானிகளின் ப்ரத்யக்ஷமும் பிரமாணமாகஇருக்கிறதென்று காட்ட பகவானல் பகவத்கீதையின் 11-வது அத்தியாயத்தில் அர்ஜுனனுக்கு விச்வரூபம் காட்டப்பட்டதுமன்றி அர்ஜுனன் செய்த ஸ்தோத்திரத்தின் மாதிரியும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

**விஞ 2:—** ஸ்ரீவிஷ்ணுதான் ஸர்வோத்தமரென போதிக்கும் ஸாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் வாக்யங்கள் எவை? ஸ்வாமி!

**ஸ்ரீஸ்வாமிகள்:—** ஸ்ரீகிருஷ்ணர் விஷ்ணு என்பதை நீங்கள் ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள். இல்லையேல்

" हृषीकेशं तदावाक्यमिदमाह "
" किं नो राज्येन गोविन्द "
" का प्रीतिस्स्या जनार्दन "
" धृतिं न विन्दामि शमं च विष्णो "

"ஹிருஷீகேசம் ததாவாக்யமிதமாஹ"
"கிம்நோ ராஜ்யேன கோவிந்த"
"காப்ரீதிஸ்ஸ்யாத் ஜநார்த்தந"
"திருதிம் ந விந்தாமி சமம் ச விஷ்ணோ"

இவை முதலிய அநேக கீதாவாக்யங்கள் ஸ்ரீகிருஷ்ணர் விஷ்ணு என்பதை ஸ்தாபிக்கின்றன. இந்த ஸ்ரீ கிருஷ்ணர் ஸர்வோத்தமரென்பதோ அநேக கீதாவாக்யங்களாலேயும் ஸ்பஷ்டமாகின்றன.

1. सर्वलोकमहेश्वरं ......ज्ञात्वा मां शान्तिमृच्छति

1. ...ஸர்வலோகமகேச்வரம்......க்ஞாத்வா மாம் சாந்திமிருச்சதி
(அத்-5 சுலோ-29)

"சேதனங்களென்ன அசேதனங்களென்ன இவைகளைக்கொண்டதாயுள்ள எல்லா ஜகத்திற்கும் யஜமானனான என்னை தியானித்து முக்தியையடைகிறான்."

2. भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहंकार इतीयं मे भिन्नाप्रकृतिरष्टधा ॥

अपरेयमितिस्त्वन्यां प्रकृतिं विद्धि मे परां ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥

मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनंजय ।

பூமிராபோஅநலோ வாயு: கம் மநோபுத்திரேவச ।
அகங்காரஇதீயம் மே பின்ந ப்ரக்ருதிரஷ்டதா ॥
அபரேயமிதிஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம் வித்திமேபராம் ।
ஜீவபூதாம் மகாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ॥
எதத்யோனீனி பூதானி ஸர்வாணீத்யுபதாரய ।
அஹம் கிருத்ஸ்னஸ்ய ஜகத:ப்ரபவ:ப்ரளயஸ்ததா ॥
மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய ॥

(அத்-7 சுலோ-4-7)

“பூமி, ஜலம், அக்னி, வாயு,ஆகாசம், மனஸ்தத்வம், புத்திதத்வம், (மகத்தத்வம் சேர்ந்த) அகங்காரதத்வம், இந்த எனக்கு அடங்கிய ஜடப்ரகிருதி எட்டு வகையாய் இருக்கிறது. இந்த ஜடப்ரகிருதி தாழ்ந்தது. இவைகளிலிருந்து வேறுபட்டவளும் எவளால் இந்த ஸ்தாவரஜங்கமாத்மகமான உலகம் தாங்கப்படுகிறதோ அந்த தேவியும் எல்லா ப்ராணிகளுக்கு பிராணதாரணை செய்து கொண்டு எப்போதுமிருப்பவளுமான மகாலக்ஷ்மியை உத்தமளென்றும் எனக்கு அடங்கியவளென்றும் அறிவாய். பிறந்திருக்கும் எல்லா பிராணிகளும் மேலே சொல்லியுள்ளதும் எனக்கு அடங்கியதுமான இந்த சேதனசேதனபாக்ருதிகளிடமிருந்து (அவைகளின் யோக்யதைப்படி) உற்பத்தியானவை என்று நிச்சயமாய் அறிவாய். ஸகல ப்ரபஞ்சத்தையும் சிருஷ்டிசெய்பவன் நான், அப்படியே ஸம்ஹாரம் செய்பவனும் நான். ஹே தனஞ்ஜய! என்னைவிட பரம்பொருள் வேறு யாதொன்றுமில்லை’’ இந்த வாக்யங்களில் ஸ்ரீகிருஷ்ணபகவான் தமக்கு அடங்கியதான சேதனப்ரகிருதி அசேதனப்ரகிருதி ஆகிய இருவகை ப்ரகிருதிகளிடமிருந்துதான் எல்லா ஜகத்தும் பிறப்பதாகவும்தாம் ஜகத்திற்கு சிருஷ்டிஸம்ஹாரங்களைச் செய்வதாயும் சொல்லி தமக்கிருக்கும் உத்தமத்தன்மையை இந்த யுக்திகளைக்கொண்டு ஸ்தாபித்து தம்மைவிட மேலான பரம்பொருள் ஒன்றுமே இல்லையென்பதை பரைசாற்றி இருக்கிறார்.

3. परंभावमजानन्तोममाव्ययमनुत्तमम् ॥

பரம் பாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம் ॥

(அத்-7 சுலோ-24)

"நாசமற்றதும் உத்தமாந்தரமில்லாததும் (இதற்கு மேலானதென்று வேறொன்றுமில்லாததும்) பரிபூர்ணமானதும் இதர விலக்ஷணமானதுமான என்னுடைய யதார்த்தசொரூபத்தை (அக்ஞானிகள்) அறியார்கள்."

4. अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम्॥

அவஜாநந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் I
பரம் பாவமஜாநந்தோ மமபூதமஹேச்வரம் II

(அத்-9 சுலோ-11)

"மனுஷ்யனின் சரீரம்போல் உருவ அமைப்பு கொண்ட என்னைப் பார்த்து மூடர்கள் நான் ஒரு மனுஷ்யன்தானென்று பிரமித்து நித்யமானதும் குணங்கள் பரிபூர்ணமானதும், மிகவும்மேலானதுமான என்னுடைய உண்மையான சொரூபத்தை அறியாமல் என்னை அவமதிக்கிறார்கள்."

5. परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥
आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥
सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।

பரம் பிரம்ம பரம்தாம பவித்ரம் பரமம் பவான் I
புருஷம் சாசுவதம் திவ்யமாதிதேவமஜம் விபும் II
ஆஹுஸ்த்வாமிருஷய: ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா I
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம்சைவ ப்ரவீஷிமே II
ஸர்வமேதத்ருதம் மன்யே யன்மாம் வதஸிகேசவ

(அத்-10 சுலோ-12-14)

भूतभावन भूतेश देवदेव जगत्पते ।

பூதபாவன பூதேச தேவதேவ ஜகத்பதே

(அத்-10 சுலோ-15)

"ஹே கேசவா! தாங்கள் பரப்ரம்மம் (ஸர்வோத்தமமான பூர்ணவஸ்து) தாம் அதி உத்தமமான ஆசிரயம், தாம் பரமசுத்தர், தாம்

"ஸர்வோத்தமர், வசிஷ்டாதி மகரிஷிகளும் தேவரிஷிகளான நாரதர், அஸிதர், தேவலர் மற்றும் வேதவ்யாஸரும்கூட தங்களை பூர்ணமான ஷட்குணமுள்ளவரென்றும் விகாரமில்லாதவரென்றும், லோகவிலக்ஷணரென்றும், ஆதிதேவனென்றும், அஜனென்றும், விபு என்றும் கூறுகின்றனர். தாங்கள் எனக்கு உபதேசித்திருக்கும் தங்கள் மாகாத்மியம் எல்லாமே ஸத்யமானதென்றே நான் அறிந்திருக்கிறேன்..........................................
உலகத்திலுள்ள எல்லாப்பிராணிகளையும் உண்டுபண்ணியவரே! ப்ராணிகளை நியமிப்பவரே! தேவர்களுக்கெல்லாம் தேவனே! ஜகத்பதியே!" என்று துதித்திருக்கிறார் அர்ஜுனர். இந்த வாக்யங்களில் அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை பரப்பிரம்மம் என்று கூறியதுமன்றி இந்த அவருடைய கூற்று எல்லா மகரிஷிகளுக்கும் ஏன் வேதாந்தசூத்ரங்களை இயற்றியுள்ள ஸ்ரீவேதவ்யாஸருக்குமே ஸம்மதமானதென்று யுக்தியையும் எடுத்துரைத்திருக்கிறார்.

ஸ்ரீ கிருஷ்ணர் 11-வது அத்யாயம்வரையில் அடியிற்கண்ட அநேக யுக்திகளையும் எடுத்துச்சொல்லி நாலைந்து தடவை ஸ்பஷ்டமாய் தாம்தான் ஸர்வோத்தமரென தம்முடைய சிஷ்யராகிய அர்ஜுனனுக்கு கற்பித்து தாம் உபதேசித்த தம்முடைய உத்தம சொரூபத்தை நேரில் கண்டறிய கருவியான ஓர்தெய்வீகபார்வையை அருளினார். அந்த தெய்வீக பார்வையால் பரபிரம்மத்தை ஸாக்ஷாத்காரம் செய்துகொண்ட பிரம்மஞானியான அர்ஜுனன் ஸ்பஷ்டமாய் ஸ்ரீவிஷ்ணுவைத்தான் ஸர்வோத்தமரென்று உத்கோஷித்திருக்கிறார். ஆகவே ஞானிகளின் கண்ணுக்குப் புலப்பட்டிருப்பதன் நிமித்தம் இந்த ஸர்வோத்தமத்தன்மை மிகவும் பாரமார்த்திகமென்றே சொல்லவேண்டும்.

6. पिताऽसि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்யஸ்ச குருர்கரீயான் ।
நத்வத்ஸமோஸ்த்யப்யதிக: குதோன்யோ லோகத்ரயேப்யப்ரதிமப்பாவ ॥

(அத்-11 சுலோ-43)

"இந்த ஸ்தாவரஜங்கமாத்மகமானஉலகத்திற்கு தாம் தந்தையாயிருக்கின்றீர். தவிரவும் பூஜ்யரும் குருவும் சிரேஷ்டர்களில்

ஸ்ரேஷ்டருமாக இருக்கின்றீர். ஒப்பில்லாவண்மைகொண்ட என் கடவுளே! தமக்கொப்பானவர் மூன்று உலகங்களில் எங்குமே யில்லை. இவ்வாறிருக்க தம்மைவிட மேலானவர் எப்படி இருக்க முடியும்?''

7. मत्कर्मकृन्मत्परमः......यःसमामेति पाण्डव ॥

மத்கர்மகிருந்மத்பரம:...........யஸ்ஸமாமேதி பாண்டவ

(அத்-11 சுலோ-55)

''அர்ஜுனனே! என் ப்ரீதியின்பொருட்டு விகிதமான கர்மங்களை செய்துகொண்டுநானே ஸர்வோத்தமனென்று அறிந்த ஞானி... ......................என்னையே அடைகிருன்.''

8. श्रद्धधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ।

சிரத்ததாஞ மத்பரமா பக்தாஸ்தேதீவ மே ப்ரியா: ।

(அத்-12 சுலோ-20)

''ஆஸ்திகபுத்தியுள்ளவர்களாய் நானே(ஸ்ரீகிருஷ்ணனே)ஸர்வோத்தமனென்ற ஞானமுள்ள பக்தர்கள் எனக்கு அத்யந்தம் பிரியர்கள்.''

9. द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षरएव च ।
क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥

उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।
यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥

यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।
अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥

यो मामेवमसंमूढो जानाति पुरुषोत्तमम् ।
स सर्वविद्भजति मां सर्वभावेन भारत ॥

इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयानघ ।
एतद्बुध्वा बुद्धिमान्स्यात्कृतकृत्यश्च भारत ॥

த்வாவிமௌ புருஷௌ லோகேக்ஷரஸ்சாக்ஷரஏவச ।
க்ஷரஸ்ஸர்வாணி பூதானி கூடஸ்தோக்ஷர உச்யதே ॥

உத்தம:புருஷஸ்த்வன்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: l
யோலோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈசுவர: ll
யஸ்மாத்க்ஷரமதீதோஹம் அக்ஷராதபிசோத்தம: l
அதோஸ்மி லோகே வேதேச ப்ரதித: புருஷோத்தம: ll
யோமாமேவமஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம் l
ஸ ஸர்வவித் பஜதிமாம் ஸர்வபாவேன பாரத ll
இதிகுஹ்யதமம் சாஸ்த்ரமிதமுக்தம் மயாநக l
ஏதத்புத்வா புத்திமான்ஸ்யாத் கிருதகிருத்யஸ்ச பாரத ll
(அத்-15 சுலோ-16-20)

"ப்ரமாணங்களால் நிச்சயிக்கப்பட்டவர்கள் உலகில் க்ஷரமென்றும், அக்ஷரமென்றும் இருவகை சேதனர்களுண்டு. பிரம்மாதி ஸர்வஜீவராசியும் (சரீரநாசம் பெற்றிருப்பதன் நிமித்தம்) க்ஷரபுருஷர்களெனப்படுகின்றனர். (நிர்விகாரளாயிருப்பதன் நிமித்தம்) கூடஸ்தள் எனப் பெயர்கொண்ட மகாலக்ஷ்மி (சரீரநாசமற்றிருப்பதால்) அக்ஷரை என்று பெயர்கொண்டிருக்கிறாள். ஆகிய இந்த க்ஷர அக்ஷர புருஷர்களிலிருந்து உத்தமபுருஷரான புருஷோத்தமர் தனிப்பட்டவர். ஆகையால்தான் அவர் பரமாத்மா (பரம = உத்தமரான, ஆத்மா = சேதனர்) என்று चेतनश्चेतनानां 'சேதனஸ்சேதநாநாம்' முதலான வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறார். (பரமாத்மா புருஷோத்தமரென்பதற்கு யுக்தியையும் பகவான் அறிவிக்கிறார். அதாவது-) புருஷோத்தமன் மூன்று உலகங்களிலும் பிரவேசித்து அவைகளை ரக்ஷித்தும் தாங்கியும் வருகிறார். மூவுலகமும் அழிந்தாலும் அவர்மட்டில் அழியாதிருப்பதன்நிமித்தம் அவர் அவ்யயன் எனப்படுகிறார். அவர் பிரவேசித்திருக்கும் உலகம் அழிவை அடைந்தும் அவருக்குமட்டில் அழிவில்லாதிருப்பதன் காரணம் யாதெனில் அவர் 'ஈசுவரர்' நினைக்கமுடியாத வல்லமை பெற்றவர். (அந்த உத்தமானபுருஷர் தாம்தானென ஸ்ரீகிருஷ்ணர் அறிவிப்பதாவது:—) நான் க்ஷரபுருஷர்களின் ஸமூகத்தைமீறி அவர்களைவிட மேலாக இருப்பதாலும் அக்ஷரையான மகாலக்ஷ்மியைவிட உத்தமனாக இருப்பதாலும் மஹாபாரதம் முதலிய பௌருஷேய நூல்களிலும் சரியே, வேதங்களிலும் சரியே, நானே புருஷோத்தமனென பிரக்யாதி பெற்றிருக்கிறேன். பாதவம்சத்தோனாகிய ஹே அர்ஜுனா! இவ்வாறு (ஸ்ரீ கிருஷ்ணர்க்ஷா

க்ஷரபுருஷர்களைவிட உத்தமமென்றும்இப்படியே வேதாதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறுரென்றும் எந்த அதிகாரி **असंमूढः जानाति पुरुषोत्तमं** "அஸம்மூட:ஜாஞதிபுருஷோத்தமம்" என் ஸர்வோத்தமத்தன்மைபொய்யானது (கல்பிதம்)என்று எண்ணுமல் நான் புருஷோத்தமனுயிருப்பது உண்மைதானென யதார்த்தமாயறிவானே அவன்ஸர்வசாஸ்திரங்களின்அர்த்தங்களையறிந்தவனுவான். அவன் ஸர்வத்தையும் அறிந்தவனே (எல்லாவற்றிலும் பிரதானமான பரமாத்மாவை அறிந்துவிட்டால் அபிரதானமாயுள்ள இதர எல்லா வஸ்துக்களை அறிவதால்ஏற்படும் பலன்களெல்லாம் பிரதானமான பரமாத்மாவின் ஞானத்தால் ஏற்படும் பலனில் அடங்கிப்போகிறது)இவ்வாறு நான் புருஷோத்தமனென்பதைஅறிந்தவன்எல்லா வகையிலும் (தந்தையாகவும், ஸ்வாமியாகவும் ஸுஹிருத்தாகவும் பந்துவாகவும், நண்பனுகவும், கதியாகவும்) என்னையே ஆராதிக்கிறுன். இதுமிகவும் இரகசியமாக வைத்துக்கொள்ளவேண்டிய விஷயம். ஹே! பாபமில்லாதவனே! உன்பொருட்டு இதுஎன்னுல் உபதேசிக்கப்பட்டது. இதை அறிந்தபின் பின்னுடி நான் உபதேசித்தபடி என்னை தியானித்து அபரோக்ஷ ஞானியாகிறுன். பிறகு முக்தனுகவும் ஆகிறுன்"

இப்படி ஸ்ரீகிருஷ்ணர் தாம் எல்லா சேதனர்களைவிட உத்தமன் என்று வாய்விட்டு சொல்லியும் அந்த பகவானின் வாக்யத்தில் நம்பிக்கையில்லாத முட்டாள்களின் சம்சயத்தை நீக்க மூவுலகங்களையும் தாங்குதல்ரக்ஷித்தல் அவ்யயத்தன்மை ஈசுவரத்தன்மை முதலானவைதம்மிடம் பொருந்தியிருப்பதாய் அனேக யுக்திகளை எடுத்துச்சொல்லி இந்த யுக்திகள்சரியானதென்று நம்பிக்கையுண்டாவதற்காகஇவைகளுக்குவேதங்களின் சம்மதியிருப்பதைநிரூபித்திருக்கிறுர். மலைகளைப்பிளப்பதில் இணையற்றதுவஜ்ராயுதம். அதை சாணையில்கொடுத்துதீட்டி அதைச்சுற்றிலும்அழகிய தங்கக்கட்டிட வேலைகள் செய்யப்பட்டு அது அலங்கரிக்கப்பட்டிருந்தால் அது எவ்வளவு சோபிதமாய் இருக்குமோ அப்படி பலமான அக்ஞானிகளை நிவர்த்திக்கக்கூடிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் வசனங்கள் யுக்திகளால் அலங்கரிக்கப்பட்டதாய் வேதங்களின் சம்மதிகளைக் கொண்டு திடப்பட்டிருப்பதன் நிமித்தம்அவை மிக்க பிரமாணம் என்று ஏற்படுகிறது. அதனுல்தான் ஸ்ரீகிருஷ்ணனின் வசனங்கள் மூவுலகிலும் மிகுந்த கௌரவம் பெற்றிருக்கின்றன.

**விஞ 3:—** மகாஸ்வாமி ! பிரம்மருத்திராதிகளுக்கு ஸர்வோத்தமத் தன்மை இல்லை என்று ஸ்பஷ்டமாய் ஸ்ரீ பகவத்கீதையில் எந்த இடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது ? சிவனே ஸர்வோத்தமன், சக்தி (மகாலக்ஷ்மி) யே எல்லோரைவிட உத்தமி என்ற சந்தேகங்கள் நீங்காமற்போனால் ஸ்ரீவிஷ்ணுதான்ஸர்வோத்தமரென்ற விஷயம் ஸ்தாபிக்கப்பட்டதாய் ஏற்படாது.

**ஸ்ரீஸ்வாமிகள்:—** பிரம்மஞானியாகிதிவ்யசக்ஷுஸ்ஸைக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணரின் விசுவரூபத்தைப் பார்த்திருந்த அர்ஜுனர், சிவன் சக்திமுதலியவர்கள் ஸர்வோத்தமர்களில்லைஎன்றவிஷயத்தில் சாக்ஷியாவார். அவர் சாக்ஷ்யம் சொல்லியிருப்பதாவது:—

1. **पश्यामिदेवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।**
**ब्रह्माणमीशं कमलासनस्थं ऋषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥**

பச்யாமி தேவாம்ஸ்தவ தேவதேஹே ஸர்வாம்ஸ்ததா பூதவிசேஷஸங்கான் । பிரம்மாணமீசம் கமலாஸனஸ்தம் ரீஷீம்ஸ்ச ஸர்வானுரகாம்ஸ்சதிவ்யான் ॥

(அத்-11, சுலோ-15)

"ஹே தேவா ! உங்கள் சரீரத்தில் எல்லா தேவர்களையும், கமலாஸனத்தில் வீற்றிருக்கும் பிரம்மதேவனையும் அவருடைய தொடையின்மீது உட்கார்ந்திருக்கும் சிவனையும், எல்லா ரிஷிகளையும், அற்புதமான ஸர்ப்பங்களையும் காண்கிறேன்." அபரிச்சின்னமாயுள்ள பகவத்ரூபத்தின் ஏகதேசத்தில் பகவானை ஆச்ரயித்துக்கொண்டு பிரும்மருத்திராதிகள் இருந்துவருகின்றனரென்பது தாத்பர்யம்.

2. **रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।**
**गन्धर्वयक्षासुरसिद्धसङ्घा वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥**

ருத்திராதித்யா வஸவோ யே ச சாத்யா விச்வேச்வினௌ மருதஸ்சோஷ்மபாஸ்ச । கந்தர்வயக்ஷாஸுரசித்தசங்கா வீக்ஷந்தேத்வாம்விஸ்மிதாஸ்சைவஸர்வே ॥

(அத்-11, சுலோ-22)

"11ருத்திரர்கள், 12 ஆதித்யர்கள், 8வஸுக்கள், சாத்யர்கள், விச்வேதேவதைகள் அசுவினீதேவர்கள், 49பேர் மருத்கணங்கள், பித்ருதேவதைகள் அப்படியே கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள்

சித்தர்கள் இவர்களின் சமூகங்கள் முதலிய எல்லோர்களுமே ஆச்சரியப்பட்டுக்கொண்டு தங்களைக் காண்கிறார்கள்"

3. कस्माच्च ते न नमेरन्महात्मन् गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।

கஸ்மாச்ச தே ந நமேரன் மகாத்மன் கரீயஸே ப்ரம்மணேப்
யாதிகர்த்ரே । (அத்-11, சுலோ.37)

"ஹே பரிபூர்ணமாயுள்ள ப்ரபுவே ! குருச்ரேஷ்டரும் லோக கர்த்தாவும் சதுர்முக பிரம்மனையும் சிருஷ்டித்தவருமான தங்களை (எல்லா உலகத்தாரும்) ஏன் வணங்காமலிருப்பார்களோ ?" அவசியம் வணங்குவார்கள்தானென்று அபிப்பிராயம்.

4. ब्रह्मणो हि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकांतिकस्य च ॥

பிரம்மணோ ஹிப்ரதிஷ்டா ஹமமிருதஸ்யாவ்யயஸ்யச ।
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்யச ॥
(அத்-14, சுலோ-27)

'நான் மகாலக்ஷ்மியையும் (சதுர்முகபிரம்மனையும்) நாசமில்லாத முக்தர்கள் வர்க்கத்தையும் அக்ஷயமான பலன்களைத் தருவதாயுள்ள நிஷ்காமதருமத்தையும், ஆத்யந்திகமானதும் (மிக்க உத்தமமானதும்) துக்கசம்பந்தமில்லாததுமான மோக்ஷசுகத்தையும் நிலைநிற்கச் செய்கிறவன்"

5. अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ....................... ॥

அபரேயமிஸ்த்வன்யாம் ப்ரகிருதிம் வித்திமேபராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ........................ ॥
(அத்-7, சுலோ-5.)

"ஜடப்ரகிருதியிடமிருந்து தனிப்பட்டவளும் ஸர்வ பிராணிகளின் ப்ராணதாரணைக்கு காரணமானவளுமான சேதன ப்ரகிருதியை (லக்ஷ்மிதேவியை) (சேதனசேதனாத்மகமான எல்லாஉலகத்திற்கும்) மேலானவளென்றும் எனக்கு கீழ்படிந்தவளென்றும் அறிவாய்" இந்த வாக்யங்களால் லக்ஷ்மி பிரம்மருத்ராதிகள் ஸ்ரீவிஷ்ணுவுக்கு அடங்கியவர்களேயல்லாது ஸர்வோத்தமர்கள் அல்லவென்பது சித்திக்கிறது.

**விஞ 4:—** வேதார்த்தங்களை நிர்ணயிப்பதாயுள்ள பிரம்ம சூத்திரங்களில் அவைகளை இயற்றிய ஸ்ரீ வேதவியாஸபகவான் விஷ்ணுதான் பிரம்மமென அதாவது ஸர்வோத்தம வஸ்துவென்று எந்த யுக்திகளைக்காட்டி நிரூபித்திருக்கிறார்? அதே யுக்திகளைக் கொண்டு ஸ்ரீமத்பகவத்கீதையில் விஷ்ணு ஸர்வோத்தமனென்பது ஸ்தாபிக்கப்பட்டிருக்குமாகில் பிரம்மசூத்திரங்களுக்கும் ஸ்ரீகிருஷ்ணரின் உபதேசமொழிகளுக்கும் ஏகவாக்யம் உண்டாகும்.

**ஸ்ரீஸ்வாமிகள்:—**வேதாந்த சூத்திரங்களில் வியக்தமாய் வாய்விட்டுகூறிய அனேக யுக்திகளைக் கொண்டும் சூசனையாய் சுட்டிக்காட்டியுள்ள கணக்கற்ற யுக்திகளைக்கொண்டும் விஷ்ணு தான்பிரம்மம் ஸர்வோத்தமர்என்பதுநிஷ்கரிஷிக்கப்பட்டிருக்கிறது. அத்தகைய யுக்திகளில் முக்யமானவைகளை மட்டில் நாம் இங்கு எடுத்துக்காட்டுகிறோம்.

i **पूर्णानन्दत्वं** பூர்ணானந்தத்வம் (பூர்ணாநந்தத்தைக்கொண்டிருத்தல்)

ii **स्वातन्त्र्यं** ஸ்வாதந்த்ர்யம் (சுதந்திரத்தன்மை)

iii **सर्वज्ञत्वं** ஸர்வக்ஞத்வம் (ஸர்வக்ஞத்தன்மை)

iv **जन्म(सृष्टि) कर्तृत्वं** சிருஷ்டி கர்த்ருத்வம்(சிருஷ்டித்தல்)

v **स्थितिकर्तृत्वं** ஸ்திதிகர்த்ருத்வம் (ஸ்திதியைத் தருதல்)

vi **लयकर्तृत्वं** லயகர்த்ருத்வம் (லயத்தைத் தருதல்)

vii **नियमनकर्तृत्वं** நியமனகர்த்ருத்வம் (நியமனம் செய்தல்)

viii **ज्ञानप्रदत्वं** க்ஞானப்ரதத்வம் (க்ஞானத்தைத்தருதல்)

ix **अज्ञानप्रदत्वं** அக்ஞானப்ரதத்வம் (அக்ஞானத்தைத் தருதல்)

x **बन्धप्रदत्वं** பந்தப்ரதத்வம் (பந்தத்தைத்தருதல்)

xi **मोक्षप्रदत्वं** மோக்ஷப்ரதத்வம் (மோக்ஷத்தைத்தருதல்)

xii **अन्तर्बहिर्व्याप्तत्वं** அந்தர்பஹிர்வ்யாப்தத்வம் (உள்ளும் புறமும் வியாபித்திருத்தல்)

xiii **पुरुषसूक्तप्रातिपाद्यत्वं** புருஷசூக்தப்ரதிபாத்யத்வம் (புருஷசூக்தத்தில் நிரூபிக்கப்பட்டிருத்தல்)

xiv **निखिलवेदवेदान्तप्रतिपाद्यत्वं** நிகில வேத வேதாந்தப்ரதி பாத்யத்வம் (எல்லா வேதங்களிலும் உபநிஷத்துக்களிலும் நிரூபிக்கப்பட்டிருத்தல்)

xv **प्रणवप्रतिपाद्यत्वं** ப்ரணவப்ரதிபாத்யத்வம் (பிரணவத்தால் நிரூபிக்கப்பட்டிருத்தல்)

xvi **सत्वादिगुणराहित्यं** ஸத்வாதிகுணராஹித்யம் (ஸத்வாதி குணங்களைக்கொள்ளாமலிருத்தல்)

xvii **कर्मबन्धराहित्यं** கர்மபந்த ராஹித்யம் (கர்மபந்தமில்லாமை)

xviii **सर्वसत्कर्मफलभोक्तृत्वं** ஸர்வஸத்கர்மபல போக்த்ருத்வம் (ஸர்வஸத்கர்மங்களின் பலன்களைபுஜிக்கும் தன்மை)

xix **सर्वत्रसमत्वं** ஸர்வத்ரஸமத்வம் (எங்கும்சமானமாயிருத்தல்)

xx **प्रत्येकंसर्वेन्द्रियकार्यकारिविलक्षणेन्द्रियवत्त्वं** ப்ரத்யேகம்ஸர்வேந்திரிய கார்யகாரிவிலக்ஷணேந்திரியவத்வம் (தனித்தனியாய் எல்லா இந்திரியங்களின் காரியத்தையும்செய்யும் விலக்ஷணமான இந்திரியங்களைப்படைத்திருத்தல்)

xxi **मुक्तिहेतुभूतत्वं** முக்திஹேதுபூதத்வம் (முக்திக்குக்காரணமாய் இருத்தல்)

xxii **ज्ञानविषयत्वं** க்ஞானவிஷயத்வம் (க்ஞானத்திற்கு விஷயமாயிருத்தல்)

xxiii **परमाक्षरत्वं** பரமாக்ஷரத்வம் (பரமாக்ஷரனுயிருத்தல்)

xxiv **अव्यक्तत्वं** அவ்யக்தத்வம் (அவ்யக்தமாயிருத்தல்)

xxv **अचिन्त्यशक्तिमत्वं** அசிந்த்யசக்திமத்வம் (அசிந்த்யமான சக்தியைக்கொண்டிருத்தல்

இவை முதலான அநேக லக்ஷணங்களால் * (அசாதாரணமான இயல்புகளால்) விஷ்ணுதான் பிரம்மமென ஸ்ரீவேதவியாஸர் நிர்ணயித்திருக்கிறூர்.

* வேறு எதற்குமில்லாததான அதாவது அசாதாரணமான தர்மம் (இயல்பு) லக்ஷணமெனப்படும். எந்த வஸ்துவின் லக்ஷணம் கூறப்பட

மேற்கண்ட கருத்தின்படிக்கும் ஸ்ரீமத்பகவத்கீதையின் வாக்யங்களை பரிசீலனை செய்வோம்.

(i) பூர்ணாநந்தத்வம் என்பது ஸ்ரீ விஷ்ணுவின் இயல்பு என்று "आनन्दमयोऽभ्यासात्" "ஆனந்தமயோப்யாஸாத்" முதலான பிரம்மசூத்ரங்களில் நிச்சிதமாய் இருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணர் பூர்ணாநந்த ஸ்வரூபராய் இருப்பதன் நிமித்தம் அவர் ஸர்வோத்தமரென நிச்சயிக்கலாம். எப்படியெனில் மானிடர்கள் பொன், பொருள், துணி, வாகனம் முதலியவைகளான எல்லா போக்ய வஸ்துக்களை சுகத்திற்காக அபேக்ஷிக்கின்றனர். சுகம் ஏன் என்று கேட்டாலோ அதற்கு பதில் இல்லை. ஆகையால் சுகம் என்பது சுயமாய் புருஷார்த்தம் (புருஷர்களால் விரும்பப்படுவது) ஆகும் அப்படிப்பட்ட சுகத்தால் பூர்ணமாய் இருப்பவர் விரும்பவேண்டிய பொருள் யாதொன்றும் எங்குமே இருக்காது. ஆகவே பூர்ண சுகமுள்ளவர் நிரபேக்ஷராய் இருப்பதால் அவர் ஸர்வோத்தமன் எனப்படுகிறார். ஸ்ரீகிருஷ்ணர் சொல்வதாவது:—

**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किं च न ।**
**नानवाप्तमवाप्तव्यं........................ ॥**

---

வேண்டுமோ அந்த வஸ்து லக்ஷ்யமெனப்படும். லக்ஷ்யத்தைத் தவிர எந்த வஸ்துவிடமுமில்லாமலும் லக்ஷ்யத்தில் மட்டில் இருந்துவருவதுமான தர்மம் (இயல்பு) லக்ஷணமென்றாகும். உதாஹரணமென்னவென்றால் மாட்டின் கழுத்தில் பெரியதொரு சதை தொங்குகிறது. அதை ஸம்ஸ்கிருத பாஷையில் **सास्ना** ஸாஸ்ந என்று சொல்வதுண்டு. இது இதரப் பிராணிகளுக்கில்லை. மாட்டிற்கு மட்டிலிருப்பதால் இது மாட்டின் லக்ஷணமாகும். ஆதலால் **सास्नादिमत्वं** ஸாஸ்நாதிமத்வம் ஸாஸ்னம் முதலியவைகளைக்கொண்டிருப்பது கோவின் லக்ஷணம். (அசாதாரணமான இயல்பு) எனப்படுகிறது. ஆகவே "ஸாஸ்நாதி"களைக்கொண்டிருப்பது கோ ஆகும் என்று வஸ்துநிர்தேசம் செய்வது லக்ஷண க்ஞானத்தின் முக்ய பிரயோஜனம். பிரகிருதத்தில் ஸர்வோத்தமத்தன்மையை பிரயோஜனமாகவுள்ள ஸகலமான ஜகத்சிருஷ்டி கர்த்ருத்வம் முதலிய தர்மங்கள் பிரம்மருத்திராதிகளிடம் எங்குமில்லாமல் விஷ்ணுவிடம் மட்டிலும் இருப்பதால் விஷ்ணுதான் ஸர்வோத்தமர் என்று பிரம்மசூத்ரகாரர் நிர்ணயித்திருக்கிறார். பகவத்கீதையிலும் கூட பிரம்மசூத்திரங்களில் அறிவிக்கப்பட்டிருக்கும் அநேக லக்ஷணங்களும் தோன்றியிருப்பதன் நிமித்தம் தாம் ஸர்வோத்தமரென்று ஸ்ரீகிருஷ்ணர்ஸ்பஷ்டமாய் விவரித்துக் காட்டியிருக்கிறார்.

நமே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன l
நாநவாப்த மவாப்தவ்யம் ......................................ll
(அத்-3, சுலோ-22)

"ஹே அர்ஜுனு! நான் பூர்வம் அடையாமலிருந்து பிறகு நான் அடையவேண்டியதாயுள்ள அபேக்ஷிதமான வஸ்துயாதொன்றும் இம்மூவுலகிலுமில்லை. ஆகவே அந்த வஸ்துவின் நிமித்தம் நான் செய்யவேண்டியதான எந்த கர்மாவுமில்லை."

பிரம்மருத்திராதி எல்லா ஜீவராசிகளும் மோக்ஷத்தைக் கருதியோ அல்லது முக்கியமாய் பரமாத்மாவின் ப்ரஸாதத்தை கருதியோ பரமாத்மாவின் ஆராதனையில் ஈடுபட்டிருப்பதாலும் ஸ்ரீ கிருஷ்ணர் ஒருவரே அவ்வாறில்லாமலிருப்பதாலும் இந்த லக்ஷணம் ஸ்ரீகிருஷ்ணரிடம்மட்டில் பொருந்தி அதனுல்அவர்ஸர்வோத்தமரென கருதப்பட்டிருக்கிருர். மகாலக்ஷ்மியானவள் நித்ய முக்தாளாயினும் அந்தம்மாள் ஸ்ரீவிஷ்ணுவுக்கு அதீனளாயிருந்துதான் அவளுடையசுகானுபவம் பெறுகிருள். ब्रह्मणो हि प्रतिष्ठाहं "பிரம்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம்" என்று பகவான் தாம் லக்ஷ்மீ தேவியாருக்கும்ஆதாரனெனச்சொல்லிக்கொண்டிருக்கிருரல்லவா?

(ii) ஸ்வாதந்திரியம் ஸர்வோத்தமத்தன்மையை நிர்ணயிக்கும் லக்ஷணமாகுமென்று "तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः" "ததனன்யத்வமாரம்பணசப்தாதிப்ய:"முதலான பிரம்ம சூத்திரங்களில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்த லக்ஷணம் தம்மிடம் இருப்பதாய் சொல்லிக்கொண்டிருக்கிருர்.

1. मां विद्धयकर्तारमव्ययम् ।

மாம் வித்யகர்த்தாரமவ்யயம் l (அத்-4, சுலோ-13.)

"பிராம்மணுதி சாதுர்வர்ண்யத்திற்கும் நானே கர்த்தா. ஆனுல் எனக்கு வேறு யாரும் கர்த்தா கிடையாது. நான் ஸ்வதந்திரன் என்று நீ அறிவாய்"

2. मत्तः सर्वं प्रवर्तते । மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே l
(அத்-10,சுலோ-8)

"என்னுலேயே எல்லா பிராணிகளும் தம் தம் காரியங்களில் பிரவிருத்திக்கின்றனர்" "नऋते त्वत्क्रियते किञ्चनारे" "நரிதேத்வத்க்ரியதே கிஞ்சநாரே" முதலிய சுருதிகளின் அர்த்தத்தைத்தான்

ஸ்ரீகிருஷ்ணர் நிரூபித்து எல்லாம் தம்முடைய ஆதீனமென்று கூறியிருக்கிறார்.

(iii) ஸர்வக்ஞத்வம்:— எல்லா அர்த்தங்களையும் விஷயமாகக் கொண்ட ஞானம் ஸர்வக்ஞத்வமெனவாகும். இந்த ஞானத்தில் ஸ்வவிஷயகமான (தம்மைப்பொருத்த) ஞானமும் அவரைத் தவிர்த்துள்ள இதர எல்லா ஜகத்திலுள்ள பதார்த்தங்களின் விஷயகமான ஞானமும் உள்ளடங்கியிருக்கிறது. பிரம்ம சூத்திரத்தில் அத்ருச்யத்வாதிகாணத்தில் இது சர்வோத்தமத் தன்மையை சாதிப்பதாயுள்ள சாதகமான யுக்தி என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீ விஷ்ணு ஒருவருக்கே இந்த தர்மம் (இயல்பு) இருக்கிறதேயல்லாது இதர பிரம்மாதி தேவதைகளுக்கும் இல்லை என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் அறிவித்திருப்பதாவது:—

1. बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।
तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥

பஹூனிமே வ்யதீதானி ஜன்மானி தவசார்ஜுன ।
தான்யஹம் வேதசர்வாணி நத்வம் வேத்தபரம்தப ॥
(அத்-4. சுலோ-5)

"ஹே அர்ஜுனா! எனக்கும் சரியே என் ஆதீனத்திலுள்ள உனக்கும் சரியே அனந்தமான ஜன்மங்கள் ஆகிவிட்டன. அவைகளை நான் அறிவேன். அவைகளை நீ (பரம்தபனாயினும் அதாவது மேலான தவத்தோனாயினும்) அறியாய்." இதனால் ஸ்ரீ கிருஷ்ணர் ஸர்வக்ஞரென்பதும் அர்ஜுனன் முதலான ஜீவர்கள் அல்பக்ஞர்களென்பதும் சித்திக்கிறது.

2. वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥

வேதாஹம் ஸமதீதானி வர்த்தமானானி சார்ஜுன ।
பவிஷ்யாணி ச பூதானி மாம்து வேத நகஸ்சன ॥
(அத்-7, சுலோ-26)

"ஹே அர்ஜுனா! முன்பு இருந்துவந்ததும் இப்போது இருப்பதும் இனி இருக்கப்போவதுமான எல்லாவஸ்துக்களையும் நான் அறிந்தவனாவேன், என்னைமட்டில் ஒருவரும்அறிந்தபாடி

ல்லை. (ஸர்வக்ஞரென பிரசித்திபெற்றிருக்கும்) சதுர்முகனும் என்னை அறிந்தவராகார். (க: என்றுசதுர்முகனுக்குப் பெயர்)"

இவ்வாறு ஸ்ரீகிருஷ்ணன் தமக்கு ஸர்வ விஷயகமான ஞானமிருப்பதாய் கூறி பிரம்மாதிகளுக்கு அத்தகைய ஞானமில்லை என்று அறிவிப்பதாவது:—

3. वेदान्तकृद्वेदविदेव चाहम् ।

வேதாந்தகிருத் வேதவிதேவசாஹம் ॥ (அத்-15, சுலோ-15.

"வேதாந்த சூத்ரங்களை இயற்றியவனும் எல்லா வேதங்களையும் பூராவாய் அறிகிறவனும் நானே."

4. न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।

நமேவிது: ஸுரகணா: ப்ரபவம் ந மகர்ஷய: ॥

(அத்-10, சுலோ-2)

"தேவர்களின் சமூகமும் மகரிஷிகளும்கூட என் மகாத்மியத்தை அறியார்கள்" இதனால் தேவாதிகளின் ஞானமும் குறைச்சல் என்று நிச்சயமாகிறது. சிஷ்யனுன அர்ஜுனனும் இவ்வாறே அபிப்பிராயப்படுகிறுன்.

5. सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।
न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥
स्वयमेवात्मनाऽऽत्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।

ஸர்வமேத த்ருதம் மன்யே யன்மாம் வதஸி கேசவ ।
நஹிதே பகவன் வ்யக்திம் விதுர்தேவா நதானவா: ॥
ஸ்வயமேவாத்மனாத்மானம் வேத்தத்வம் புருஷோத்தம ॥

(அத்-10, சலோ-14,15)

"ஹே கேசவா! (பிரம்மருத்திராதிகளை ப்ரவர்த்திக்கச் செய்யும் கடவுளே!) என்னை உத்தேசித்து தாங்கள் கூறிய தங்கள் மாகாத்மியமெல்லாம் யதார்த்தமே. ஹே பகவன்! தம்முடைய சாமர்த்தியத்தின் அதிசயத்தை தேவர்களாயினும் சரியே அறிந்தவர்கள் அன்று. ஹே புருஷோத்தமா! மற்றவர்களின் அபேக்ஷையன்றி தம்முடையஸாமர்த்தியத்தாலேயே தாமேதம்மை அறிந்து கொண்டிருக்கின்றீர்!" இதனல் பிரம்மாதிகள் ஸர்வக்ஞர்களாய் இருப்பினும் பகவானுடைய சாமர்த்தியாதிசயத்தை சம்பூர்ணமாய் அறியமாட்டார்களென்பது ஏற்படுகிறது.

பகவானை பூராவாய் அறிந்துகொள்ள முடியுமென்று நினைப்பவர்கள் முழுமூடர்களென்று பகவான் அறிவிக்கிறார்.

6. अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।

அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தய: ll

(அத்-7, சுலோ-24)

“பூராவாகவோ அல்லது என் அனுக்கிரஹம் இல்லாமலோ அறிய முடியாத என்னை பூராவாய் அறியலாம் என்று மூடர்கள் எண்ணுகின்றனர்”

ஜன்மாதி அஷ்டகர்த்ருத்வம் ஸர்வோத்தமத் தன்மையை ஸ்தாபிக்கும் யுக்தி என்று “जन्माद्यस्ययत:” “ஜன்மாத்யஸ்யயத:” முதலான வேதாந்த சூத்ரங்களில் மிகவும் பிரசித்தி ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீபகவத்கீதையிலும் ஸ்பஷ்டமாய் ஸ்ரீகிருஷ்ணருக்கு சிருஷ்டி ஸ்திதி முதலிய அஷ்டகர்த்ருத்வம் இருப்பதாய் பிரமாணங்களால் நிஷ்கரிக்கப்பட்டிருக்கிறது.

(iv) சிருஷ்டிகர்த்ருத்வம்

1. अहं कृत्स्नस्य जगतः प्रभवः ।

அஹம் கிருத்ஸ்னஸ்ய ஜகத: ப்ரபவ: l (அத்-7, சுலோ-6)

“நான் எல்லா உலகங்களையும் சிருஷ்டிப்பவன்”

2. अहं सर्वस्य प्रभवः அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ: l

(அத்-10, சுலோ-8)

“நான் எல்லா உலகங்களையும் உற்பத்தி செய்கிறவன்”

3 ये चैव सात्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि.................. ॥

ஏ சைவசாத்விகா பாவா ராஜஸாஸ்தாமஸாஸ்சயே l
மத்தஏவேதி தான்வித்தி........................... ll

(அத்-7, சுலோ-12.)

“உலகத்திலுள்ளவைகளான ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் ஆகிய மூன்றுவகை பதார்த்தங்கள் என்னிடமிருந்தே உற்பத்தியானவை என்று அறிவாய்”

4. अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे ।

அவ்யக்தாத்வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்த்யாஹராகமே ‌।
(அத்-8, சுலோ-18)

"அவ்யக்தமென்ற பெயர்பூண்ட பரமாத்மாவிடமிருந்து எல்லா காரிய வஸ்துக்களும் சிருஷ்டிகாலத்தில் பிறக்கின்றன."

5. भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।
त्वत्तः कमलपत्राक्ष...................... ॥

பவாப்யயௌ ஹி பூதானாம் சுருதௌ விஸ்தரசோ மயா ।
த்வத்த: கமலபத்ராக்ஷ........................... ॥
(அத்-11, சுலோ-2)

"ஹே தாமரைக்கண்ணனே! எல்லா வஸ்துக்களுக்கும் உம்மாலேயே உற்பத்தி என்ன லயமென்ன இவைகள் உண்டாகின்றன வென்று நான் விஸ்தாரமாய்க் கேட்டிருக்கிறேன்."

6. पिताऽसि लोकस्य चराचरस्य ।

பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய ।          (அத்-11, சுலோ-43)

"ஸ்தாவரஜங்கமாத்மகமான எல்லா ஜகத்துக்கும் தாங்கள் தந்தையாவீர்"

7. चातुर्वर्ण्यं मया सृष्टम् ।

சாதுர்வர்ண்யம் மயா ஸிருஷ்டம் ।     (அத்-4, சுலோ-13.)

"நான்கு வர்ணசமூகமும் என்னாலேயே சிருஷ்டிக்கப்பட்டது"

8. अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ।

அஹமாதிர்ஹி தேவானும் மகர்ஷீணும் ச ஸர்வச: ।
(அத்-10, சுலோ-2)

"நான் எல்லாதேவர்களுக்கும் மகரிஷிகளுக்கும்காரணனானவன்"

9. पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ।

புனஸ்தானி கல்பாதௌ விஸிருஜாம்யஹம் ।
(அத்-9, சுலோ-18)

"பிரளயத்தில் அழிந்துபோயிருந்த ஜகத்தை மீண்டும் கல்பத்தின் துவக்கத்தில் சிருஷ்டிக்கிறேன்"

10. प्रभवः । பிரபவ: ।          (அத்-9, சுலோ-7)

"நான் சிருஷ்டிப்பவன்"

11. प्रभविष्णु च ப்ரபவிஷ்ணு ச (அத்-13, சுலோ-17.)

"பரபிரம்மமாகிய (ஸ்ரீகிருஷ்ணர்) சிருஷ்டி காலத்தில் எல்லாவற்றையும் உற்பத்தி செய்கிறவர்"

12. सर्वयोनिषु कौंतेय मूर्तयः संभवन्ति याः ।
तासांब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥

ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தியா: ।
தாஸாம் பிரம்ம மஹத்யோனி ரஹம் பீஜப்ரத: பிதா ॥
(அத்-14, சுலோ-4.)

"ஆதிசிருஷ்டியில் மட்டில் நான் ஜகத்தை சிஷ்டிப்பவனென்றல்ல தேவர்கள், மனுஷ்யர்கள், பசுக்கள், பக்ஷிகள்முதலிய பிறப்புகளில் எந்தெந்த பிராணிகள் பிறக்கின்றனவோ அவைகளுக்கெல்லாம் மகாலக்ஷ்மி (தாயைப்போல்) க்ஷேத்திரரூபமான காரணமாவாள். நான் கர்ப்பாதானம் செய்யும் தந்தையாவேன்" இதனால் உலகிலுள்ள தந்தை முதலானவர்களிடம் பகவான் இருந்துகொண்டு புத்ராதிகளை உற்பத்தி செய்பவரென்று ஏற்படுவதால் விஷ்ணுவின் ஸர்வோத்தமத்தன்மை இனி சந்தேகிக்கத் தகுந்ததல்ல. ஸ்ரீகிருஷ்ணரும் தாமே எல்லா ஜகத்தையும் சிருஷ்டிப்பவரென்றுகூறி வேறு யாருக்கும் அந்த ஸாமர்த்தியமில்லை என்று அறிவித்திருக்கிறார். அதாவது—

13. मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।

மயாத்யக்ஷேண ப்ரகிருதி: ஸூயதே ஸசராசரம் ।
(அத்-9, சலோ-10)

"அதிபதியாகிய என்னால் பிரேரிக்கப்பட்டவளாய் சேதனாசேதனாத்மகமான பிரபஞ்சத்தை சேதனப்ரகிருதி பிரஸவிக்கிறாள்"

14. प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।

ப்ரகிருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸிருஜாமி புன: புன: ।
(அத்-9, சுலோ-8.)

"எனக்கு ஆதீனமாயுள்ள ப்ரகிருதியை காரணமாக ஏற்றுக்கொண்டு சேதனாசேதனாத்மகமான எல்லாபிரபஞ்சத்தையும் திருப்பி சிருஷ்டிக்கிறேன்." இதனால் பரமாத்மா சுதந்திரனான சிருஷ்டிர்த்தாவென்றும் மகாலக்ஷ்மி முதலியோர் அவருக்கு கீழ்படிந்த

வர்களாகி அவருடைய அனுக்கிரஹத்தால் தான் சிருஷ்டிப்பவர்களென்றும் நிச்சயிக்கப்படுகிறது. பகவான் தம்மை சிருஷ்டிப்பவர் வேறு யாருமில்லை என்று சொல்லிக்கொள்கிறார்.

ஆதாவது—

15. विद्धयकर्तारमव्ययं ।

வித்யகர்த்தாரமவ்யயம் । (அத்-4, சுலோ-13)

"எனக்கு கர்த்தா வேறு யாருமில்லை. நான் அவ்யயனென்றறிவாய்"

16. न मे विदुः सुरगणाः प्रभवम् ।

நமே விது: ஸுரகணா: ப்ரபவம் ।

(அத்-10, சுலோ-2,)

"தேவர்களும் ரிஷிகளும் எனக்கு உற்பத்தி இல்லையென்றேஅறிந்திருக்கின்றனர்" இப்படியானல் **बहूनि मे व्यतीतानि** "பஹூனி மே வ்யாதீதானி" என்ற சுலோகத்தில் தமக்கு அநேக ஜன்மங்களாகிவிட்டனவென்று பகவான் சொல்லிக்கொண்டிருப்பது எப்படிபொருந்துமென்றால்,தாம் சொல்லியுள்ளஇவ்வார்த்தையின் தாத்பரியமின்னதென்று ஸ்ரீ கிருஷ்ணரே மேலே காட்டப்படும் சுலோகத்தில் அறிவித்திருக்கிறார்.

17. अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।
प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥

அஜோபி ஸந்நவ்யயாத்மா பூதானாமீச்வரோபி ஸந் ।
ப்ரகிருதிம் ஸ்வாமாதிஷ்டாய ஸம்பவாம்யாத்ம மாயயா ।

(அத்-4, சுலோ-6)

"நான் சரீர உற்பத்தி இல்லாதவனாயினும், நாசமற்றதானசொரூபமும் சரீரமுமில்லாதவனாயினும், எல்லாப்பிராணிகளுக்கும் நியாமகனாயிருப்பினும் நான் இஷ்டப்பட்டுதான் எனக்கு கீழ்ப்படிந்தவர்களான வஸுதேவாதிகளை (நாஸிம்ஹாவதாரத்தில் தூணை ஏற்படுத்திக்கொண்டதுபோல்) நிமித்தம் செய்துகொண்டு ஆவிர்பவிக்கிறேன்".

18. जन्म कर्म च मे दिव्यमेवं ।

ஜன்ம கர்மசமே திவ்யமேவம் । (அத்-4, சுலோ.9)

"இவ்வாறு லோக விலக்ஷணமான என்னுடைய அவதாரங்களை யென்ன என்னுடைய காரியங்களென்ன (இவைகளை அறிந்துகொண்டவர்கள் முக்தர்களாகின்றனர்.)" இந்த இரீதியாய் ஸ்ரீகிருஷ்ணர் தாமே எல்லா ஜகத்தின் ஸ்தூலஸூக்ஷ்மாதி ஸர்வ சிருஷ்டிகளையும் செய்கிறவரென்றும் மகாலக்ஷ்மி முதலியோர் சுதந்திரமாய் சிருஷ்டிகர்த்தர்களல்லவென்றும் தம்மை சிருஷ்டிப்பதென்பது எவராலும் எக்காரணத்தைக்கொண்டும் கிடையவே கிடையாதென்றும் கூறியிருப்பதின் நிமித்தம் ஸ்வாதந்தர்யேண ஸர்வசிருஷ்டிகர்த்ருத்வ ரூபமான லக்ஷணம் ஸ்ரீ கிருஷ்ணனுக்குத்தான் பிராப்தமாயிற்று. ஆகவே அவர்தான் ஸர்வோத்தமர்.

(V) ஸ்திதிகர்த்ருத்வம்:—சுதந்திரமாய் எல்லா ஜகத்தையும் ரக்ஷிக்கும் ஸாமர்த்தியம் பிரம்மாதிகள் யாருக்குமேயில்லை. விஷ்ணுவுக்குத்தானுண்டு. ஆகையால்தான் விஷ்ணு ஸர்வோத்தமராவார். விஷ்ணு மூன்றுவகையாய் ரக்ஷிக்கிறார். (1) இந்தஸ்தாவர ஜங்கமாத்மகமான ஜகத்தின் உள்ளும் புறமும் பிரவேசித்து அதன் சொரூபம் அழிந்துபோகாமல் பகவான் தாங்கி வருகிறார். (2) சேதனம் ( உயிருள்ளது ) அசேதனம் ( உயிரில்லாதது ) ஆகிய பலவவ்வ வியக்திகளிலே உட்புகுந்தவராயிருந்து ஜீவர்களுக்கு ஆகாராதிகளைக் கொடுத்து பகவான் பரிபாலனம் செய்கிறார். (3) மற்றும் பகவான் ஸாக்ஷாத்தாய் அவதாரங்களை எடுத்து எப்படி தந்தை தனது மகனை கையாலேயே எடுத்து வளர்த்து பரிபாலிப்பாரோ அம்மாதிரி பக்தர்களை ஸம்ரக்ஷிக்கிறார். இவ்வாறு மூன்று விதமாய் சுதந்திரமாக எல்லா ஜகத்தையும் ஸம்ரக்ஷிப்பது பகவான் ஸ்ரீ விஷ்ணுவுக்குத்தான் உண்டு.

1. मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ।

மயிஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ।

(அத்-7, சுலோ 7,)

"சிகப்பு முத்து முதலான இரத்தினங்கள் இவைகளை கோர்த்திருக்கும் நூலின் தாங்கலால் எப்படி நிற்குமோ அப்படி எல்லாசராசரபிரபஞ்சமும் நான் தாங்குவதால் நிலைபெற்றிருக்கிறது" பகவானின் ஆசிரியமில்லாமற்போனால் இவ்வுலகம் தூள்தூளாய் சிதறிப்போகுமென்று அபிப்பிராயம்.

2. सर्वस्य धातारम् । ஸர்வஸ்ய தாதாரம் । (அத்-8, சுலோ-9,)

"பரமாத்மா எல்லா பிரபஞ்சத்திற்கும் தாரணையையும் போஷணையையும் செய்பவர்"

3. मत्स्थानि सर्वभूतानि ।

*மத்ஸ்தானி ஸர்வபூதானி ।* (அத்-9, சுலோ-4,)

"எல்லா ஜீவர்களும் என் ஆதாரத்திலேயே இருக்கின்றன"

4. पिताहमस्य जगतो माता धाता ।

*பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா ।* (அத்-9, சுலோ-16)

" இந்த ஜகத்திற்கு நான் ............போஷகன் "

5. स्थानं निधानम् । *ஸ்தானம் நிதானம் ।*

(அத்-9, சுலோ-18)

"நான் ஸர்வாதாரன் தவிரவும் அத்யந்தமாய் ஸர்வத்தையும் தரிப்பவன்" அர்ஜுனனும் இவ்வாறே சொல்லுகிறார்.

6. त्वमस्य विश्वस्य परं निधानम् ।

*த்வமஸ்ய விச்வஸ்ய பரம் நிதானம் ।* (அத்-11, சுலோ-38)

"தாம் இந்த பிரபஞ்சத்திற்கு மிகவும் உத்தமமான ஆசிரயம்"

7. पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥

(அத்-11, சுலோ, 15)

"ஹே தேவா! தங்கள் சரீரத்தில் (தங்களை அண்டியவர்களாய்) எல்லா தேவர்களும், ப்ராணி சமூகங்களும், சதுர்முகனும், சதுர்முகனின் தொடையிலிருந்துவரும் பரமசிவனும், எல்லாரிஷிகளும் அற்புதமான ஸர்ப்பங்களும் வசித்துவருவதை நான் காண்கிறேன்."

8. सर्वभृच्चैव । *ஸர்வப்ருச்சைவ ।*

(அத்-13, சுலோ 15,)

"பரபிரம்மம் (ஸ்ரீகிருஷ்ணர்) எல்லாவற்றையும் தரிப்பவராவார்"

9. भूतभर्तृ च तज्ज्ञेयम् ।

*பூத பர்த்ரு ச தத்க்ஞேயம் ।* (அத்-13, சுலோ 17)

" பரபிரம்மம் (ஸ்ரீ கிருஷ்ணர்) எல்லா பிராணிகளுக்கும் தாரணை போஷணை இவைகளைச் செய்பவர்."

10. भर्ता.........देहेऽस्मिन्पुरुषः परः ।

பர்த்தா...............தேஹேஸ்மின் புருஷ: பர: ।

(அத்-13, சுலோ-22,)

"பிரகிருதி விலக்ஷணரான புருஷர் (ஸ்ரீ கிருஷ்ணர்) இந்த சரீரத்தி லிருந்துகொண்டு ப்ராணிகளை தரித்திருக்கிறார்."

11. यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ।

யோலோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈசுவர: ।

(அத்-15, சுலோ-17)

"நாசமற்றவனும் எண்ணமுடியாததான வல்லமை படைத்தவரு மான பரமாத்மா மூவுலகிலேயும் பிரவேசித்து அவைகளை தரிப்பவ ராயிருக்கிறார்" ஒருவருக்கு தாரணை போஷணை இவைகளைச் செய் பவர் அவைகளை அடையப்பெற்றவரைவிட மேலானவரென்பது உலகில் பிரசித்தி இருக்கிறது. பரமாத்மா எல்லாருக்குமே தாரணபோஷணை இவைகளைச் செய்பவராயிருப்பதால் ஜகத்தை விட பரமாத்மா உத்தமரென்று கருதப்படுகிறார். இதனாலுக்கிருந் துவரும் லோகதாரணை சக்தி பகவானின் அதீனமென்றும் தமக்கு வேறுயாரும் ஆதாரமாயில்லை என்றும் ஸ்ரீ கிருஷ்ணர் அறிவித்து தமக்கிருக்கும் ஸர்வோத்தமத் தன்மையைதிடப்படுத்துகிறார்.

12. गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।
पुष्णामि चौषधीः सर्वास्सोमो भूत्वा रसात्मकः ॥
अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥

காமவிச்ய சபூதானி தாரயாம்யஹமோஜஸா ।
புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வாஸ்ஸோமோ பூத்வாரஸாத்மக: ॥
அஹம் வைச்வானரோ பூத்வா ப்ராணினாம்தேகமாச்ரித: ।
ப்ராணாபான சமாயுக்த: பசாம்யன்னம் சதுர்விதம் ॥

(அத்-15, சுலோ-13-14)

"நான் பூமிக்குள் பிரவேசம்செய்து என் சக்தியைக்கொண்டு எல்லா ப்ராணிகளையும் தரிக்கிறேன் (பூமியிலிருக்கும் தாரணை சக்தி என் அதீனமென்பது தாத்பரியம்) அமிர்தஸரூபமான சந்திரனுக்குள்ளிருந்து எல்லா பயிர் முதலியவைகளை போஷிப்பதா

யுள்ள சந்திரனிடமிருந்துவரும் சக்தி, என் அதீனமென்று தாத்பரியம். நான் வைச்வாநரனென்று பெயர்பூண்டு ப்ராணிகளின் சரீரத்திற்குட்புகுந்து ஜாடராக்னியிடமிருந்துகொண்டு ப்ராணன், அபானன் இவர்களுடன் சேர்ந்து பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், பேயம் ஆகிய இந்த நான்குவகை அன்னத்தை பக்குவம் செய்கிறேன். (நான்குவகை அன்னத்தை ஜீர்ணப்படுத்துவதாயுள்ள ஜாடராக்னியின் சக்தி என் அதீனமென்று பொருள்.)

13. येचैव सात्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि नत्वहं तेषु ते मयि ॥

யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸா ஸ்தாமஸாஸ்ச யே ।
மத்தஏவேதி தான்வித்தி நத்வஹம் தேஷு தேமயி ॥

(அத்-7, சுலோ-12,)

"உலகத்திலுள்ளவைகளான ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் இந்த எல்லா பதார்த்தங்களும் என்னாலேயே உண்டாயிருக்கின்றன. நான் அவைகளை அண்டியவனாய் இல்லை. ஆனால் அவைகள் என்னிடம் அண்டியவைகளாயிருக்கின்றன."

14. मत्स्थानि सर्वभूतानि नचाहं तेष्ववस्थितः ।
மத்ஸ்த்தாநி ஸர்வபூதாநி நசாஹம் தேஷ்வவஸ்தித: ।

(அத்-9, சுலோ-4,)

"எல்லா பிராணிகளும் என் ஆதாரத்திலேயே இருக்கின்றன. நான் அவைகளை ஆச்ரயித்தவனாய் அவைகளிடமில்லை." இதுமட்டிலல்ல. ஸ்ரீ கிருஷ்ணர் தம்முடைய அவதாராதி பலவகை ரூபங்களால் பிரம்ம ருத்திராதிகளுக்கு அசக்யமான துஷ்ட நிக்ரஹம் சிஷ்டபரிபாலனம் ஆகிய காரியங்களையும் செய்கிறார்.

15. यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥
परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय सम्भवामि युगेयुगे ॥

யதா யதா ஹி தர்மஸ்யக்லானிர் பவதிபாரத ।
அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ॥

பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥
(அத்-4, சுலோ-7, 8.)

"எந்த எந்த காலத்தில் தர்மத்திற்கு குறைவும் அதர்மத்திற்கு விருத்தியும் உண்டாகுமோ அப்பொழுதெல்லாம் நான் அவதாரம் செய்கிறேன். ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும், பாபிகளை நாசம் செய்வதற்காகவும், தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவும், அந்தந்த காலங்களில் அவதரிக்கிறேன்."

16. त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता ।

த்வமவ்யய: சாசுவததர்ம கோப்தா ।
(அத்-11, சுலோ-18,)

"தாங்கள் (ஸ்ரீ கிருஷ்ணன்) ஸநாதன தர்மத்தை ரக்ஷிப்பவர்"

17. अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥

அனன்யாஸ் சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ॥
(அத்-9, சுலோ-12)

"அன்னியர்களிடமில்லாது என்னிடமே மனமுள்ளவர்களாய் பக்திமிகுந்து என்னையே எவர் தியானம் செய்கின்றனரோ என்னுடைய நித்யகைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும் அந்த பகவத் பக்தர்களின் யோகக்ஷேமத்தை நான் நிர்வாகம் செய்கிறேன்." அவர்கள் அடையப்பெற்றிருக்கும் க்ஞானாதிகளின் ரக்ஷணை என்ன இனி அவர்கள் பெறப்போகும் முக்தி முதலான பலன்கள் என்ன ஆகிய இரண்டையும்பற்றி பகவான் பார்த்துக்கொள்ளுகிறார் என்று தாத்பரியம்

18. न मे भक्तः प्रणश्यति ।

நமே பக்த: ப்ராணச்யதி ।    (அத்-9, சுலோ 31)

"என்னுடைய பக்தனுக்குஎக்காலத்திலும் அநர்த்தமுண்டாகாது" ருத்திராதிகளின் பக்தர்களான ராவணன், பாணன், பஸ்மாஸுரன் முதலியோர் அழிந்துபோனது மிகவும் பிரசித்தமே.

(Vi) ஸம்ஹார கர்த்ருத்தவம்:—பிரம்மா, ருத்திரன், இந்திரன் முதலான எல்லா சேதன சமூகத்தையும் அப்படியே அவியக்த தத்

வம் வரையிலுள்ள அசேதன தத்வங்களையும் ஸ்ரீ ஹரி ப்ரளய காலத்தில் சுவாதந்திரியமாய் ஸம்ஹாரம்செய்து அவைகளை தம்முடைய உதரத்தில் வைத்துக்கொண்டு ஆலிலைமேற் பள்ளிகொள்வார். இதனாலும் ஸ்ரீ ஹரி ஸர்வ ஜகத்துக்கும் உத்தமனென்று சித்திக்கிறது.

1. अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ।

*அஹம் கிருத்ஸ்னஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா* ।

(அத்-7, சுலோ-6)

"எல்லா பிரபஞ்சத்திற்கும் நான் சிருஷ்டி கர்த்தா. அப்படியே ஸம்ஹார கர்த்தா."

2. रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥

*ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்த ஸம்ஜ்ஞகே* ।

(அத்-8, சுலோ-18,)

"மகாப் பிரளயகாலம் ஏற்படும் சமயம் அவ்யக்தரென்ற பெயருள்ள பரமாத்மாவிடமே எல்லா கார்யப்ரபஞ்சமும் ஒடுங்கிப் போகின்றன".

3. प्रलयः । *பிரலய:* । (அத்-9, சுலோ-18)

"நானே ஸம்ஹார கர்த்தா."

4. ग्रसिष्णुः । *க்ரஸிஷ்ணு:* । (அத்-13, சுலோ-17)

"பரபிரம்மம் (நான்) ஸர்வத்தையும் ஸம்ஹரிப்பவன்." இதரர்கள் செய்யும் ஸம்ஹாரகாரியம் என் அதீனமாயிருப்பதால் ஸ்வதந்த்ரமாய் ஸம்ஹாரம் செய்யுந்தன்மை எனக்கேயன்றி இதரர்களுக்கு ஏற்படாதென்று ஸ்ரீ கிருஷ்ணர் அறிவிக்கிறார்.

5. सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।
कल्पक्षये ... ... ... ...॥

*ஸர்வபூதானி கௌந்தேய ப்ரகிருதிம் யாந்தி மாமிகாம்* ।
*கல்பக்ஷயே*...................................॥

(அத்-9,சுலோ-7,)

"ஹே! கௌந்தேய! ஸ்தாவர ஜங்கமாத்மகமான ஜகத் என் அதீனமாயுள்ள ப்ரகிருதியில் கல்பாந்தத்தில் லயமடைகிறது." நானே ஸம்ஹரித்து சூக்ஷ்ம ரூபத்தால் மூலப்ரகிருதியிடம் சேர்த்துவிடுகிறேனென்பது பகவானுடைய தாத்பரியம்.

6. मृत्युस्सर्वहरश्चाहम् ।

மிருத்யுஸ்ஸர்வ ஹரஸ்சாஹம் ৷ (அத்-10, சுலோ-34,)

"மாரகனுயிருப்பதன் நிமித்தம் மிருத்யுவெனப்பெயர் கொண்டு மிருத்யுவென்ற தேவதைக்குள்ளிருந்து ஸர்வத்தையும் ஸம்ஹரிப்பவன் நானே."

7. कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो लोकान्समाहर्तुमिह प्रवृत्तः ।

காலோஸ்மிலோககக்ஷயக்ருத்ப்ரவிருத்தோலோகாந்ஸமாஹர்த்துமிஹ ப்ரவிருத்த: ৷ (அத்-11, சுலோ-32)

"ஸகல ஸம்ஹாரகனுயிருப்பதால் நான்காலனென்ற நாமம் கொண்டேன். பரிபூர்ணனுன நான் பூமியின் பாரத்தை தொலைப்பதற்காக உன் முன்னேதான் இருசேனைகளிலுமுள்ள ஜனங்களை ஸம்ஹரிக்கும் வேலையில் யத்தனப்பட்டிருக்கிறேன்."

பீமசேனர், அர்ஜுனன், த்ரோணுசாரியார், அசுவத்தாமா முதலானவர்கள்செய்யும் ஸம்ஹாரகாரியமும் தன்னுல் அவர்களிடமிருந்துகொண்டு, நடத்தப்பட்டுவருவதால்தான் அது ஈடேறிவருகிறதென்று ஸ்ரீகிருஷ்ணர் ஸூசனைசெய்திருக்கிறுர். இந்த அர்த்தத்தைதான் அடியிற்கண்டுள்ளதைப்போன்ற அனேக வாக்யங்களில் பகவான் நிரூபித்திருக்கிறுர்.

8 निमित्तमात्रं भव सव्यसाचिन्
मया हतांस्त्वं जहि माव्यथिष्ठाः ।

நிமித்தமாத்ரம் பவஸவ்யஸாசின் ৷
மயாஹதாம்ஸ்தவம் ஜஹிமாவ்ய திஷ்டா: ৷৷

(அத்-11, சுலோ-33, 34)

"ஹே அர்ஜுனு! உன்போன்ற யுத்தவீரர்களில் நின்று என் இச்சைப்படி நடத்தும் என் இந்த இரு சேனைகளின் ஸம்ஹார காரியத்தில் நீ கேவலம் நிமித்தமாவாய். என்னுல் முன்னம் கொல்லப்பட்டு போனவர்களை நீ யுத்தத்தில் ஸம்ஹரிக்கிறுய் என்றுல் சத்ரு ஸம்ஹார காரியம் முக்கியமாய் என்னுலேயே நடைபெற வேண்டியதாகும். முக்கியகாரணனுகியநான் இவர்களின் ஸம்ஹாரத்தில் இச்சைகொண்டு விட்டேனுதலால் இவர்கள் அநேகமாய் மாண்டுபோனவவர்களே. உன்னிடமிருந்துகொண்டு அவர்களை ஸம்ஹரிப்பவனும் நானே. நீ கேவலம் நிமித்தம்தான், பெயருக்குமட்டில் நீ காரணம்."

(Vii) நியமனகர்த்ருத்வம்:—சேதனுசேதனுத்மகமான எல்லா ஜகத்தையும் அவைகளின் காரியங்களில் ஸ்வதந்திரமாய் பிரேரி பிக்கும்வேலை ஸ்ரீ கிருஷ்ணர் ஒருவரிடமே இருப்பதால் அவர் ஸர் வோத்தமரென்று சித்திக்கிறது.

1. मत्तः सर्वं प्रवर्तते ।

மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே I (அத்-10,சுலோ-8)

"என்னுலேயே சகலமான ப்ராணிகளும் அவரவர்களின் காரியங்களில் பிரவிருத்திக்கின்றனர்."

2. ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥

ஈசுவரஸ் ஸர்வபூதானும் ஹிருத்தேசேர்ஜுன திஷ்டதி I
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா II
(அத்-18,சுலோ-61,)

"ஸர்வ நியாமகனுன நான் சரீரமுள்ள சகல பிராணிகளையும் பல வகையான காரியங்களில் சுயேச்சையாய் பிரேரிபிப்பவனுப் சகல ப்ராணிகளின் ஹிருதயப்ரதேசத்தில் இருந்து வருகிறேன்"

இவ்வாறு ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமக்கிருக்கும் நியமனம் செய்யும் தன்மையைச்சொல்லி இன்னமும் விசேஷ நியமனத்திற் காக தாம் எடுத்துக்கொண்ட ரூபங்களின் விசேஷங்களை ஏழாவது அத்தியாயத்திலும் பத்தாவது அத்தியாயத்திலும் உபதேசித்திருக் கிருர். அதாவது:—

3. रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥
पुण्यो गंधः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
बलं बलवतांचाहं कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥

ரஸோஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசிஸூர்யயோ:I
ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு II

புண்யோகந்த: ப்ருதிவ்யாம் சதேஜஸ்சாஸ்மி விபாவஸௌ ।
ஜீவனம் ஸர்வபூதேஷு தபஸ்சாஸ்மி தபஸ்விஷு ॥
புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ।
பலம் பலவதாம்சாஹம் காமராக விவர்ஜிதம் ।
தர்மா விருத்தோ பூதேஷு காமோஸ்மி பரதர்ஷப ॥
(அத்-7, சுலோ. 8-11)

"ஹே கௌந்தேய! ஜலத்தில் ஸாரபூதமாயுள்ள ரஸமென்ற குண த்தை நியமிப்பவன் நான். சந்திர சூர்யர்களிடமிருக்கும் பிரபைக்கு (பிரகாசத்திற்கு) நியாமகன் நானே. ஸகலமான வேதங்களில் ஓம்காரம் முக்யமாயிருப்பதற்கு நான் காரணன். ஆகாசத்திலு ள்ள சப்தமென்ற ஸ்பாவ தர்மத்திற்கு நான் நியாமகனுவேன். ஆண்களிடமிருக்கும் ஆண்மைக்கும் நான் நியாமகன். பூமியிலி ருக்கும் சுபமான கந்தமென்ற ஸ்பாவ தர்மத்திற்கு நான் நியாம கன். அக்னியிடமிருக்கும் எரிக்கும் சக்திக்கு நான் நியாமகன். எல்லா பிராணிகளிடமுமிருக்கும் ப்ராணதாரண சக்திக்கும் நான் நியாமகனுவேன். தபஸ்விகளிடமிருப்பதாயுள்ள ஸாரபூதமான தபஸ்ஸென்ற இயல்புக்கு நான் நியாமகன். புத்திமான்களிடமி ருந்துவரும் புத்தி என்ற ஸாரபூதமான இயல்புக்கு நான் நியா மகன். தேஜஸ்விகளிடமிருக்கும் தேஜஸ்ஸென்ற முக்ய தர்மத்தி ற்கு நான் காரணம். பலிஷ்டர்களிடமிருந்து வருவதாயும் பலனைக் கருதாமல் யோக்யமான இடங்களில் உபயோகப்படுவதான பலத்தைநான் பிரவர்த்திக்கிறேன். (துஷ்டமான பலத்திற்கும் பகவான் நியாமகராயிருப்பினும் அந்த பலம் உபாஸனைக்கு அருகமாகாது.) மேலும் ஸர்வ பிராணிகளிலுமிருந்துவருவதான தர்மத்திற்கு மாருயில்லாத காமங்களுக்கும் நான்நியாமகன்."

4. अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम् ।
मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥

அஹம் க்ரதுரஹம் யக்ஞ: ஸ்வதாஹமஹமௌஷதம் ।
மந்த்ரோஹமஹமேவாஜ்யமஹமக்னிரஹம் ஹுதம் ॥
(அத்-9, சுலோ-16)

"நான்தான் க்ரதுவிலும், யக்ஞத்திலும், ஸ்வதாவிலும், யக்ஞத்தில் உபயோகமான ஔஷதமென்ற வனஸ்பதிகளிலும், யக்ஞத்தின் மந்திரங்களிலும், ஆஜ்யம், அக்னி, ஹோமம், இவைகளிலும் எல்லாவற்றிலுமே நியாமகனுயிருந்துகொண்டு க்ரது, யக்ஞன்

முதலான நாமங்களுள்ளவனாய் அந்தந்த பதார்த்தங்களில் இருந்து வருகிறேன்.'' இதனால் பகவானுக்கிருந்துவரும் பூராவான யக்ஞத்தின் நியாமகத் தன்மையும் சொல்லப்பட்டதாயிற்று.

5. साधिभूताधिदैवं मां साधियज्ञंचयेविदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥

ஸாதிபூதாதி தெய்வம் மாம் ஸாதியக்ஞம் சயே விது: I
ப்ரயாணகாலேபி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ: II

(அத்-7, சுலோ-30)

'' அதிபூதங்களில் (சரீரம்முதலான பிருதிவ்யாதி எல்லா நாசமுள்ள பதார்த்தங்களில்) நியாமகனாயிருப்பவனும், அதிதெய்வமாயிருப்பவனும், (ஹிரண்யகர்பர் முதலான எல்லா தேவர்களிலும் அந்தர்கதனாய் நியாமகனாயிருப்பவனும்) அதியக்ஞனாயிருப்பவனும் (யக்ஞக்ரியைக்கும், யக்ஞ கர்த்தாவுக்கும், யக்ஞத்திற்கு உபயோகமாகவுள்ள திரவியங்களுக்கும், யக்ஞத்தாலுண்டாகும் பலன்களுக்கும் நியாமகனாயிருப்பவனும்)ஆன என் ரூபவிசேஷங்களை அறிந்து மரணகாலத்திலேயும்கூட என்னை யார் அறிவாரோ அவரே சமாதியைக்கொண்ட மனமுடையவர்களாவார்கள்.''

6. यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धिमामकम् ॥

யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதே கிலம் I
யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ தத்தேஜோ வித்திமாமகம் II

(அத்-15, சுலோ-12)

''எல்லா பிரபஞ்சத்தையும் வெளிச்சப்படுத்தும் சூர்யனிடமிருக்கும் பிரகாசசக்தியும் சரியே சந்திரனிடமும் அக்னியிடமுமிருக்கும் பிரகாச சக்தியும் சரியே என்னுடைய அதீனமானது''

7. अहमात्मागुडाकेशः सर्वभूताशयस्थितः ।
वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इद्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥

அஹமாத்மா குடாகேச: ஸர்வபூதாசயஸ்தித: I
வேதானும் ஸாம வேதோஸ்மி தேவானுமஸ்மி வாஸவ: I

இந்திரியாணும் மனஸ்சாஸ்மி பூதாணுமஸ்மிசேதநா ll
(அத்-10, சுலோ-20-22)

*"ஹே! நித்திரையைஜயித்த அர்ஜுனனே! நான் எல்லா விடங்களிலும் வியாபித்திருந்து ஸகலப்ராணிகளின் அந்தக்காணத்திலேயும் (அவரவர்களின் யோக்யதைப்படி அவரவர்களை நியமனம் செய்வதற்காக) இருந்துவருகிறேன். [இப்பேர்பட்டதாயுள்ள நியாமகமான பகவத்ரூபங்களுக்கு விபூதி ரூபங்களென்று நாமம். இத்தகைய விபூதி ரூபங்களை 18 சுலோகங்களில் பகவான் விவரித்திருக்கிறார். அவைகளை சொல்லப் புகுந்தால் இந்நூல் விரிவாகுமென்று அஞ்சி இங்கு நிரூபிக்கவில்லை.] (ரிக்வேதத்தை தவிர்த்துள்ள இதர) வேதங்களில் ஸாமவேதத்திற்கு ஆதிக்கத்தைத் தருகிறவனும், தேவர்களில் இந்திரனுக்கு ஆதிக்கத்தைத் தருகிறவனும் இந்திரியங்களில் மனஸ்ஸுக்கு ஆதிக்கத்தைத் தருகிறவனும் ஜட பதார்த்தங்களில் சித்தத்திற்கு ஆதிக்கத்தைத்தருகிறவனுமாக" ஆகி நானே பலவகை நியாமக ரூபங்களுடன் அந்தந்த பதார்த்தங்களில் இருக்கிறேன் "रुद्राणां शङ्करश्चास्मि" "ருத்திராணும் சங்கரஸ்சாஸ்மி" என்று பதினொன்று ருத்திரர்களில் மகாதேவனுக்கு ஆதிக்கத்தைத்தருகிறவனாய் சங்கரனென்ற பெயருள்ளவனாய் நானே அவரிடம் ஸான்னித்யம் பெற்றிருக்கிறேன்; என்று பகவான் சொல்லிக்கொண்டிருக்கிறாராதலால் ருத்திரன் பகவானுடைய ஆளுகைக்கு உட்பட்டவரென்றும் நாராயணர் ருத்திரனை அடக்கி ஆளுபவர் என்றும் சித்தித்தது..

न तदस्ति विनायत्स्यान्मयाभूतं चराचरम् ।
नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परन्तप ॥
यद्यद्विभूतिमत्सत्वं श्रीमदूर्जितमेववा ।
तत्तदेवावगच्छत्वं मम तेजोंशसंभवम् ॥

நததஸ்தி விநயத்ஸ்யான்மயா பூதம் சராசரம் l
நாந்தோஸ்தி மமதிவ்யாநும் விபூதிநும் பரந்தப ll
யத்யத்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவவா l
தத்ததேவாவகச்சத்வம் மமதேஜோம்சஸம்பவம் ll
(அத்-10, சுலோ-41,)

* இந்த ஸ்தலங்களில் நேரில் உபதேசத்தாலேயே அறியப்படவேண்டிய பல ஸூக்ஷ்மவிஷயங்கள் அடங்கியிருக்கின்றன.

" ஸ்தாவர ஜங்கமாத்மகமான பிரபஞ்சத்தில் என்னுடைய அதீன மாயில்லாத எந்த வஸ்துவும் இருக்காது.* (எல்லாம் என்னுடைய அதீனமென்று தாத்பரியம்) ஹேபரம்தபனே! என்னுடையதிவ்ய மானதும் லோகவிலக்ஷணமானதும் அற்புதமானதுமான விபூதி ரூபங்களுக்கு முடிவுஎன்பதில்லே. எங்கெங்தவஸ்து அந்தந்தஇனங் களில் ஆதிக்கியம்பெற்றிருந்தாலும் சரி ஸம்பத்தோடுகூடியிருந்தா

---

* "प्रकृतिस्त्वां नियोक्ष्यति" (பிரகிருதிஸ்தவாம் நியோக்ஷ்யதி) என்றும் "करिष्यस्यवशोऽपितत्" (கரிஷஸ்யஸ்யவசோபி தத்)என்றும் கூறியதிலிருந்து பிரகிருதியானவள் பலாத்காரமாய் ஜீவர்களிடமிருந்துகொண்டு ஸ்வதந்திரமாய் அவர்களே காரியங்களேச்செய்ய பிரேரிபிக்கும் திறமை வாய்ந்தவளென்று அர்த்தம்தோன்றும்.ஆனல் ; இந்தஅர்த்தம்சரியானதல்ல ஏனென்றல்1. ஸ்ரீ கிருஷ்ணர் கூறிய மேற்கண்ட வாக்யங்களால் பகவானுடைய சன்னிதானம் தான் அந்த பிரகிருதியின் விசேஷமான சாமர்த்தியத்திற்கு காரணமென்று நிச்சயமாகிறது. தவிரவும் 2. "प्रकृतिं विद्धि मे पराम्" (பிரகிருதிம் வித்திமே பராம்) "प्रकृतिंयान्तिमामिकाम्" (பிரகிருதிம்யாந்திமாமிகாம்) "ब्रह्मणो हि प्रतिष्ठाहम्" (பிரம்மணே ஹி ப்ரதிஷ்டாஹம்)முதலிய வாக்யங்களில் பிரகிருதியானவள் என் அதீனமானவளென்று ஸ்ரீகிருஷ்ணர் ஸ்பஷ்டமாய்கூறியிருக்கிறர். தவிரவும் 3.பதினெட்டாம் அத்யாயத்தில் அடுத்தாப்போலுள்ள சுலோகத்திலேயே,

ईश्वरस्सर्वभूतानां हृद्देशेऽर्जुनतिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥

(ஈசுவரஸ்ஸர்வ பூதாஞம் ஹிருத்தேசேர்ஜுனதிஷ்டதி 1 ப்ராமயன் ஸர்வ பூதானி யந்த்ராரூடானி மாயயா 11) என்றதைக்கொண்டு சரீரமுள்ளவர்களான ஸர்வஜீவர்களின் ஹிருதயப்ரதேசத்திலும் நான் வீற்றிருந்து பல வகை காரியங்களில் பிரேரிப்பிக்கிறேனென்று பகவான் சொல்லியிருப்பதால் ஸ்ரீ கிருஷ்ணர்தான் முக்யமான பிரேரணே செய்பவராவார். மஹாலக்ஷ்மி முதலியோர் பரமாத்மாவின் பிரேரணேக் காரியங்களில் அங்கபூதர்களாய் இருப்பவர்கள். தவிரவும் பகவானுக்கு அதீனமான செயலுள்ளவர்கள். இங்குள்ள ஈசுவரனென்ற பதம் ஸ்ரீ கிருஷ்ணரையல்லாது இதரர்களே அறிவிப்பதாய் எண்ணலாகாது. "मामेकं शरणं व्रज" (மாமேகம் சரணம் விரஜ) என்று முன்னுடிவரும் சுலோகத்தின்படி இங்கு ஈசுவரசப்தத்தால் சொல்லப்படுகிறவர் ஸ்ரீ கிருஷ்ணரேயாவார்.

லும் சரி அல்லது விசேஷமாய் அபிவிருத்தியடைந்த நிலமையில் இருந்தாலும்சரி அதெல்லாம் என்னுடைய தேஜஸ்ஸின் ஓர் அம்ச விசேஷத்துடன் கலந்திருப்பதாய் அறிவாய்''

(Vii&Viii) க்ஞானப்ரதத்வமும் அக்ஞானப்ரதத்வமும்-

எல்லா ஜகத்துக்கும் ஞானம் அஞானம் முதலான எல்லா மனோதர்மங்களை ஸ்வாதந்திரியமாய் பிரேரிக்கும் சாமர்த்தியம் ஸ்ரீ விஷ்ணுவுக்குத்தானிருக்கிறதேயல்லாது இதரர்களுக்கில்லை. மனஸ் முதலான ஸர்வேந்திரியங்களுக்கும் நியாமகன் என்ற அர்த்தம் கொண்ட ஹிருஷீகேசனென்ற நாமமே, இந்த விஷயத்தை சூசனை செய்யும். பிரம்மருத்திராதி ஸகலதேவதைகளுக்கும் ஞானத்தை அருளுகிறவர் ஸ்ரீ விஷ்ணுதான். ஸ்ரீ விஷ்ணுவின் ஞானத்திற்கு நியாமகராய் இருப்பவர் வேறு ஒருவரும் இல்லை. இவர் சுயமாகவே ஸர்வக்ஞன். பிரம்மாதிகள் தான் ஸ்ரீ விஷ்ணுவை அறிய அவருடைய அனுக்ரஹத்தால் சக்தராவார்கள் பகவான் சொல்வதாவது:—

1. बुद्धिर्बुद्धिमतामस्मि ।

புத்திர்புத்திமதாமஸ்மி I (அத்-7. சுலோ-10)

''ஞானிகளிடமிருக்கும் ஞானத்திற்கு நான் காரணம்''

2. यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥

யோயோ யாம்யாம் தனும் பக்த: சிரத்தயார்ச்சிதுமிச்சதி I
தஸ்ய தஸ்யாசலாம் சிரத்தாம் தாமேவ விததாம்யஹம் II

(அத்-7 சுலோகம் 21)

'' எவனெவன் எந்தெந்த தேவதையிடம் பக்திகொண்டு சிரத்தையுடன் ஆராதிக்க அபேக்ஷிப்பானோ அவனவனுக்கு நான் அந்தசிரத்தை திடப்படும்படி செய்கிறேன்.'' இதனால் சிரத்தை (ஆஸ்திக புத்தி) யாகிய ஞானவிசேஷத்தைத் தந்தருளும் மஹிமை ஸ்ரீ கிருஷ்ணரிடமிருப்பதாய் சொல்லப்பட்டதாகும்.

3. बुद्धिर्ज्ञानमसम्मोहः क्षमासत्यं दमः शमः ।
सुखं दुःखं भवो भावो भयं चाभयमेवच ॥

अहिंसा समतातुष्टिस्तपोदानं यशोऽयशः ।
भवन्ति भावा भूतानां मत्तएव पृथग्विधाः ॥

புத்திர்ஞானமஸம்மோஹ: க்ஷமாஸத்யம் தம: சம: ।
சுகம் துக்கம் பவோ பாவோ பயம்சாபய மேவச ॥
அஹிம்ஸா ஸமதா துஷ்டி ஸ்தபோதானம் யசோயச: ।
பவந்தி பாவா பூதானும் மத்த்ஏவ பிரதக்விதா: ॥
(அத்-10 சுலோ 4-5)

"நிச்சயஞானம், சம்சயம் முதலான சாமானிய ஞானம், செய்யத்தகாத காரியங்களில் இச்சையை விலக்குவது. க்ஷமை, ஸத்யம், சமம், தமம், சுகம், துக்கம், பயம், அபயம், அஹிம்ஸை, ஸமத்வம், (த்வந்தங்களை பொறுத்தல்) ஸந்துஷ்டி (விஷயங்களை அனுபவித்தவரையில் போதுமென்ற எண்ணம்) தபஸ்ஸு, தானம், கீர்த்தி, அபகீர்த்தி ஆகிய இவ்வாறுள்ள பலவகை தர்மங்கள் பிராணிகளுக்கு என்னுலேயே உண்டாகின்றன."

4. तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥
तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥

தேஷாம் ஸததயுக்தானும் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்திதே ॥
தேஷாமேவாநுகம்பார்த்தமஹமக்ஞானஜம் தம: ।
நாசயாம்யாத்மபாவஸ்தோ ஞானதீபேன பாஸ்வதா ॥
(அத் 10. சுலோ- 10-11)

"நிரந்தரமான ப்ரீதிபூர்வமாய் என்னிடம் செலுத்திய மனதுடன் என்னை பஜிப்பவர்களுக்கு அவர்கள் எந்த ஞானத்தால் என்னை அடைவார்களோ அந்த ஞானோபாயத்தை நான்ஏற்படுத்துகிறேன் அவர்களிடம் கருணைகாட்டி அனுக்ரஹிப்பதற்காக அவர்களுடைய அந்தக்கரணத்திலுருந்துகொண்டு பிரகாசமானஞானமென்னும் ஒளியால் அவர்களின் அக்ஞானஜன்யமான தமஸ்ஸை என்ருல் மனஸ்ஸின் க்லேசங்களை நாசம் செய்கிறேன்." ஸ்ரீ கிருஷ்

ணர் ஓர் விருக்ஷத்திற்கொப்பாக பராபரதத்வத்தை நிரூபணம் செய்து தத்வஞானத்தைப் பெறும் உபாயத்தை அறிவிக்கிறார்.

அதாவது:—

5. तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृतापुराणी ॥

தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே யத: ப்ரவ்ருத்தி: பிரஸ்ருதா புராணீ ॥

(அத் 15-சுலோகம் 4)

"புராதனமான ஜனனமரணரூபமாகிய ஸம்ஸார பிரவாகம் எவரால் உண்டாயிற்றோ அந்தபுராதனனான பரமாத்மாவையே சரணமடைய வேண்டும்" இதனால் பராபரதத்வஞானமானது பரமாத்மாவின் அனுக்ரஹத்தாலேயே ஏற்படவேண்டுமென்பது சித்திக்கிறது.

சிலசமயம் பிரம்மா, ருத்திரன், இந்திரன் முதலான தேவர்கள் தங்கள் பக்தர்களுக்கு ஞானத்தையும், தங்களிடம் த்வேஷம் கொண்டவர்களுக்கு அக்ஞானநிகளையும் கொடுத்திருப்பது பிரமாணங்களால் நிச்சயமாகியிருப்பதால் (அதிவ்யாப்தியடைந்த) இந்த லக்ஷணத்தைக்கொண்டுஸ்ரீகிருஷ்ணர்தான்ஸர்வோத்தமரென்பது எவ்வாறு நிச்சயிக்கமுடியுமென்ற பிரச்னையுண்டாகக்கூடும். அதற்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் மறுமொழி கூறியிருக்கிறார்.

1. यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ॥
तस्य तस्याचलां श्राद्धां तामेव विदधाम्यहम् ॥
सतथा श्राद्धयायुक्त स्तस्याराधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥

யோ யோ யாம் யாம் தனும் பக்த: சிரத்தயார்ச்சிதுமிச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் சிரத்தாம் தாமேவ விததாம்யஹம் ॥
ஸததா சிரத்தயாயுக்த ஸ்தஸ்யாராதனமீஹதே ।
லபதே சதத:காமான்மயைவ விஹிதான்ஹிதான் ॥

(அத்-7, சுலோ-21, 22)

"எவனெவன் எந்தெந்த தேவதையினிடம் பக்தியைக்கொண்டு சிரத்தையுடன் ஆராதிக்க இச்சிப்பானோ அந்தந்த அதிகாரிக்கு அந்தந்த தேவதையினிடமிருந்துவரும் சிரத்தையையே நான்

திடப்படுத்திவிடுகிறேன். அந்த அதிகாரி அவ்வகை நிச்சலமான சிரத்தையுடன் அந்த தேவதையை ஆராதனை செய்ய அந்த தேவதையினிடம் அந்தர்கதனுயுள்ள என்னிடமிருந்தே அவன் தனது அபீஷ்டங்களைப் பெறுகிறான்.''

7. येप्यन्यदेवता भक्तायजन्ते श्रद्धयान्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥

ஏப்யன்ய தேவதா பக்தா யஜந்தே சிரத்தயான் விதா: 1
தே பி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் ll
(அத்-9 சுலோ 23.)

"அன்யதேவதைகளை பூஜித்தாலும் அந்த அன்யதேவதைகளில் அந்தர்கதனைப் இருந்துவரும் என்னுடைய பூஜையே அதுவாகும். இதை அறியாதிருக்கும் அன்யதேவதைகளை பூஜிப்பவர்கள் என்னையே விதிப்படிக்கில்லாமல் பூஜிப்பவர்களாகின்றனர்'' இந்த வாக்யங்களால் தேவதைகள் பலன்களைத்தர சுதந்திரமில்லாதவர்கள் என்பதும் அவர்களில் அந்தர்கதனுயுள்ள ஹரிதான் பலன்களைத் தரும் சக்தியை அந்த தேவதைகளுக்கு அளிக்கிறவரென்பதும் தெரியவருகிறது. தவிரவும் பிரம்மாதிகளின் ஞானமும் மிக்க குறைவானதென்பதை விசுவரூபாத்யாயத்தில் அர்ஜுனன் நிரூபித்திருக்கும் அவர்களின் நடவடிக்கையிலிருந்தே நிச்சயிக்கலாம். அவர்கள் லோகவிலக்ஷணமாயுள்ள பகவானின் விராட் ரூபத்தைக்கண்டு மிகவும் ஆச்சர்யப்பட்டிருப்பதாய் அர்ஜுனன் அறிவித்திருக்கிறான். எப்படியெனில்,

8 .रुद्रादित्यावसवो ये च साध्या वीक्षन्ते त्वां विस्मिताश्चैवसर्वे ॥

ருத்ராதித்யாவஸவோ யேச ஸாத்யா வீக்ஷந்தே த்வாம்
விஸ்மிதாஸ்சைவ ஸர்வே ll (அத்-11. சுலோ 22.)

"ருத்திரர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், சாத்யர்கள் முதலான எல்லா தேவதைகளும் ஆச்சர்யப்பட்டுக்கொண்டு தங்களைக்காண்கிறார்கள்.'' அற்புதமாகவோ அல்லது அபூர்வமாகவோ இருக்கும் வஸ்துவை பார்ப்பதால் ஆச்சர்யமுண்டாகும். ஸ்ரீ விஷ்ணுவின் ரூபம் எல்லா தேவர்களுக்கும் ஆச்சர்யத்தை விளைவித்திருப்பதைக்கொண்டு அவர்களின் ஞானம் மிக்க குறைவானதென்று ஏற்படுவதுடன் ஸ்ரீ கிருஷ்ணருக்கு அதீனமாகவே அவர்களின் ஞானமிருக்கிறதேயல்லாது ஸ்ரீ கிருஷ்ணரின் ஞானத்தை மீறிய

தாய் அதை அடக்கிப்போடுவதாயில்லை என்று சித்திக்கிறது. ஸ்ரீ கிருஷ்ணரின் ஞானம் வேறெவராலும் பிரேரிக்கப்பட்டதன்று, அர்ஜுனன் சொல்வதாவது:—

9. स्वयमेवात्मनात्मानं वेत्थत्वं पुरुषोत्तम ।

ஸ்வயமேவாத்மனாத்மானம் வேத்தத்வம் புருஷோத்தம ]

(அத்-10 சுலோ 15.)

"தங்களுடைய சொரூபத்தை தேவர்களும் சரியே, தானவர்களும் சரியே அறியார்கள். ஆனாலும் தாங்கள்தான் தங்கள் சொரூபத்தை அறிவீர்." இதனால் தேவர்களாலும் அறியப்படமுடியாத அவருடைய சொரூபத்தை ஸ்ரீ விஷ்ணு இதரர்களின் அபேக்ஷையின்றி அறிந்திருக்கிறாரென்று நிச்சயமாகிறது. "वेद विदेवचाहं" வேதவிதேவசாஹம் "நானொருவனே சுதந்திரனாய் வேதார்த்தத்தை அறிந்தவனென்று பகவான் சொல்லிக்கொண்டிருப்பதைக் கொண்டு பிரம்மாதி தேவதைகளுக்கும் வேதார்த்தஞானம் பகவானுடைய அருளால்தான் உண்டாகிறதென்றுசித்திக்கிறது. அப்படியே ஸ்பஷ்டமாய் அறிவிக்கும் வசனமுமுண்டு. அதுயாதெனில்

10. मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।

மத்த: ஸ்மிருதிர்ஞானமபோஹனம் ச ll (அத்-15 சுலோ-15)

'என்னாலேயே ஸ்மரணை, ஞானம், விபரீதஞானமுண்டாகின்றன'

X&XI பந்தப்ரதத்வமும் மோக்ஷப்ரதத்வமும்.

பந்தப்படுத்தும்படி செய்கிறவன் பந்தமடைந்தவனைவிட உத்தமனாவான். பந்தமடைந்தவர்களை விடுவிக்கிறவன் பந்தமடைந்தவர்களைவிட உத்தமனென்பது உலகமறிந்தது. இந்தலக்ஷணம் ஸ்ரீ விஷ்ணுவினிடம் மட்டிலிருப்பதால் ஸ்ரீ விஷ்ணுதான் ஸர்வோத்தமரென்று சித்திக்கிறது.

1. दैवीह्येषागुणमयी मम मायादुरत्यया ।

தைவீ ஹ்யேஷாகுணமயீ மம மாயா துர்த்யயா ll

(அத்-7. சுலோ-14)

"தேவனான ஸ்ரீ நாராயணருக்கு அதீனமாயும் மிகவும் அற்புதமாயுமுள்ள சக்தியைக்கொண்டதும் த்ரிகுணாத்மகமானதும் எனக்கு அடங்கியவளான மஹாலக்ஷ்மியை அபிமானியாகக்கொண்டதுமான அவித்யையைத் தாண்டுவது அசக்யமே."

தம்முடைய மாயையை மீறுவது அசக்யமென்று இவ்வாறு பகவான் சொல்லியிருப்பதைக்கொண்டு ஸ்ரீ விஷ்ணுவுக்கு பந்த கர்த்ருத்வமிருப்பது சித்தித்துவிட்டது. மோக்ஷகர்த்ருத்வம் ஸ்ரீ விஷ்ணுவுக்கு உண்டு என்ற விஷயத்திற்கு பல பிரமாணங்களிருக்கின்றன. அவையாதெனில்:—

2. मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ।

மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே ॥

(அத்-7. சுலோ- 14)

"எவர்கள் என்னை ஆசிரயிக்கின்றனரோ அவர்கள்(மேற்கண்டபடி மஹாலக்ஷ்மியை அபிமானியாகக்கொண்ட என் அதீனமான) ப்ரகிருதிபந்தத்தை கடக்கின்றனர்.(பரிஹரித்துக்கொள்கின்றனர்.)ப்ரகிருதிபந்தத்தின் நிவிருத்திரூபமாகியமுக்தியென்பது தம்மாலேயே ஏற்படவேண்டுமென்று பகவான் வாய்விட்டுக் கூறியிருக்கிறார்.

3. मत्कर्म कृन्मत्परमः मद्भक्तः सङ्गवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यस्समामेति पाण्डव ॥

மத்கர்மகிருந்மத்பரம: மத்பக்த: ஸங்கவர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூதேஷு யஸ்ஸமாமேதி பாண்டவ ॥

(அத்-11. சுலோ-55)

"விஹிதமான கர்மங்களைஎன்ப்ரீதியின்பொருட்டுசெய்துகொண்டு நான்(ஸ்ரீகிருஷ்ணன்தான்)ஸர்வோத்தமனென்ற ஞானமுள்ளவனும் விஷயங்களில் ஸ்னேகமில்லாதவனும் ஸகலஸஜ்ஜனர்களிடமும் விரோதமில்லாதவனும் இருக்கிறவன் என்னை அடைகிறான். என்றால் முக்தனாகிறான்." பகவானை அடைதல் என்றால் பகவானுடைய நித்யமான லோகங்களில் அவருடைய பூர்ணானுக்ரஹத்தால் வாசம் செய்வது. அதுவே முக்தியென்பது. இந்த விஷயம் முன்னாடி விவரிக்கப்படும்.

4. मच्चित्तस्सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यासि ।

மச்சித்தஸ்ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதாத் தரிஷயஸி ॥

(அத்-18. சுலோ-58.)

"என்னிடமே ஈடுபட்டிருக்கும் சித்தமுடையவனாப் ப்ரகிருதி,அவித்தை முதலியவைகளால் ஏற்பட்ட எல்லாக்லேசங்களையும் என் அனுக்ரஹத்தால் தாண்டுகிறாய். (முக்தனாகிறாய்.)"

5. सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहंत्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि माशुचः ॥

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமகம் வ்ரஜ ।
அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச ॥
(அத்-18, சுலோ-66)

"ஸர்வதர்மங்களின் பலன்களையும் என்னிடம் ஸமர்ப்பித்து வைஷ்ணவமல்லாதவைகளான எல்லா தர்மங்களையும் பரித்யாகம் செய்தோ அல்லது பகவானுக்கு சரணாகதி செய்வதே எல்லாதர்மங்களை விட மேலானதென்று அறிந்தோ என்னை ஸர்வோத்தமனாய் எண்ணி என்னிடம் சரணம் புகுவாய். எல்லாபாபங்களினின்றும் உன்னை நான் விடுவிக்கிறேன். நீ துக்கப்படாதே." ஸம்ஸாரத்திலிருந்துமுக்தனாய்ச்செய்துவிடுகிறேன் என்று தாத்பர்யம்

ஆகவே பந்தப்படுத்தும் சக்தியும் மோக்ஷத்தைத்தரும் சக்தியும் ஸ்ரீ கிருஷ்ணருக்குமட்டில் உண்டு. பிரம்மாதி ஜீவர்களுக்கு இந்த சக்தி இல்லையென்பதை, அவர்களிருந்துவரும் ஸ்தான பேதங்களென்ன அவர்களை ஆராதிப்பதால் ஏற்படும் பலன்களின் வேறுபாடுகளென்ன இந்த இரண்டுயுக்திகளைக்கொண்டு நிரூபித்திருக்கிறார். எப்படியெனில்,

6. आब्रह्मभवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्यतुकौन्तेय पुनर्जन्म न विद्यते ॥

ஆபிரம்மபவனால்லோகா: புனராவர்த்திநோர்ஜுன ।
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ॥
(அத்-8. சுலோ-16.)

"பிரம்மாவின் பவனம் முதற்கொண்டு கீழ் லோகம்வரையிலுள்ள ஸர்வலோகங்களும் திரும்பித்திரும்பி ஸம்ஸாரத்துக்குக் காரணங்களாகின்றன. என்னை அடைந்துவிட்டால் புனர்ஜன்மம்இருக்காது" ஜனலோகம் முதலான லோகத்திலிருந்துவரும் ஸ்ரீ கிருஷ்ணரை அடைந்தவர்கட்கு புனர்ஜன்மமில்லை என்றும் ஸ்ரீ கிருஷ்ணரை அடையாதவர்கட்கு புனராவர்த்தியுள்ளஸம்ஸாரம் எக்காலத்திலும் உண்டென்றும் சொல்லப்பட்டிருப்பதன் நிமித்தம் பிரம்மருத்ராதிகளை அடைவது மோக்ஷத்திற்கு காரணமல்லவென்பதும் ஸ்ரீ விஷ்ணுவை அடைவதுதான் மோக்ஷத்திற்குக் காரணமாகுமென்பதும் சித்திக்கிறது.

7. मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ।

மத்பிரஸாதாதவாப்னோதி சாச்வதம் பதமவ்யயம் ।

(அத்-18. சுலோ-56.)

"என் அனுக்ரஹத்தால் சாசுவதமானதும் நாசமில்லாததுமான ஸ்தானத்தை அடைகிறான்" தன்னை அடைதல்தான் பரமமான கதி என்று பகவான் அறிவிப்பதாவது:—

8. मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवंति महात्मान स्संसिद्धिं परमां गताः ॥

மாமுபேத்ய புனர் ஜன்ம துக்காலயமசாச்வதம் ।
நாப்னுவந்தி மஹாத்மானஸ்ஸம்ஸித்திம் பரமாம் கதா: ॥

(அத்-8. சுலோ-15)

"என்னை அடைந்த மகான்கள் (என்னை அடைவதே பரமமான கதியாயிருப்பதால்)மோக்ஷரூபமான அதிஉத்தமமாகிய சித்தியைப் பெற்றவர்களாய் சாசுவதமில்லாததும் துக்கபூர்ணமுள்ளதுமான திரும்பித்திரும்பி தேகசம்பந்தரூபஸம்ஸாரத்தை அடைவதில்லை"

9. यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ।

யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம ।

(அத்-8, சுலோ-21)

"அதிகாரியாயுள்ளவர்கள் எதை அடைந்தபின் மீண்டும் ஜனன மரணரூபமான ஸம்ஸாரத்தை அடைவதில்லையோ அது(பரமப்ராப்யமான) என்னுடைய ஸ்வரூபமேயாகும். அல்லது நித்யமான என்னுடைய வைகுண்டாதி லோகமாகும்" மகாப்ரளயகாலத்தில் பிரம்மாதி ஜகத்தெல்லாம் அழிந்துபோனாலும் எனக்கு அழிவில்லை என்று சொல்லிக்கொள்கிறார்.

10. परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।
यस्ससर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥

பரஸ்தஸ்மாத்து பாவோன்யோ வ்யக்தோ வ்யக்தாத்ஸநாதன: ।
யஸ்ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு நவினச்யதி ॥

(அத்-8, சுலோ-20)

"அவ்யக்தரென்ற நாமமுள்ள பகவானேவெனில் ஸ்வதந்திரரும் உத்தமரும் ஸநாதனரும் (அநாதிநித்யரும்) ஆவார். அவர் வியக்தமான (உற்பத்தியடைந்த) பிராணிசமூகங்களைவிட அன்னி

யர் என்றால் விலக்ஷணர். எல்லா பிராணிகளும் (பிளயத்தில்) நாசமடைந்தாலும் அவர் நாசமடைகிறதில்லை."

11. नतद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः ।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥

நதத்பாஸயதே ஸூர்யோ நசசாங்கோ ந பாவக: ।
யத்கத்வாநநிவர்த்தந்தே தத்தாமபரமம் மம ॥
(அத்-15, சுலோ-6)

"எந்த பரபிரம்மத்தின் லோகத்தை இந்த சூரியனும், சந்திரனும் அக்னியும் பிரகாசப்படுத்துவதில்லையோ எதை அடைந்தபின் மறு பிறப்பு இல்லையோ அந்த பரந்தாமம் (பரமப்ராப்யமான ஸ்தானம்) என்னுடையது"

12. तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।
तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यासि शाश्वतम् ॥

தமேவசரணம் கச்ச ஸர்வபாவேன பாரத ।
தத்ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸிசாச்வதம் ॥
(அத்-18. சுலோ-62)

"ஹே பாரதனே! ஈசுவரனை (என்னை) எவ்வகையிலும் சரணம் அடைவாய். ஈசுவரனான என்னுடைய அனுக்ரஹத்தால் உத்கிருஷ்டமான சாந்தியை (சாசுவதமான வைகுண்டாதி லோகத்தை அடையப்போகிறாய்" பிரம்மாதிதேவர்கள் சாசுவதமான பலனைக் கொடார்கள், தேவர்களை ஆராதித்து உண்டாகும் பலன் அதி அல்பமானது. தவிரவும் சாசுவதமாயில்லாதது. ஸ்ரீகிருஷ்ணரை ஸேவிப்பதால் உண்டாகும் பலனே ஸ்திரமானதாய் இருப்பதோடு மிகவும் மேலானதாய் அதைவிட மேலானது வேறொன்றுமில்லை· எனவாகும் என்று பகவான் அறிவித்துள்ளார்.

13. कामैस्तैस्तैर्हृतज्ञाना: प्रपद्यन्तेऽन्यदेवता: ।
अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ॥

காமைஸ்தைஸ்தை: ஹ்ருதஞானா: ப்ரபத்யந்தேன்யதேவதா: ।
அந்தவத்து பலம்தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் ॥
(அத்-7, சுலோ-20,23)

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥

மாமுபேத்யபுனர்ஜன்ம துக்காலயமசாச்வதம் ।
நாப்னுவந்தி மகாத்மானஸ்ஸம்ஸித்திம் பரமாம்கதா: ॥
(அத்-8, சுலோ-15)

"அதிகாரிகளாயுள்ளவர்கள் பலவகை அபீஷ்டங்களை அபேக்ஷித்து அன்யதேவதைகளை சரணமடைகின்றனர். அல்பபுத்தியுள்ள இந்த ஜனங்களுக்கு கிடைக்கும் பலன் வெகுசீக்கிரம் அழியக் கூடியதாயிருக்கும். [என்னிடம் சரணாகதனுப் ஆனுல் அனந்தமான பலனுண்டு என்பதை சூசிக்கிறார்] என்னிடம் சரணம் புகுந்தவர்களான மகான்கள் பரமமான ஸம்ஸித்தியை (மோக்ஷத்தை) அடைந்தவர்களாகி அசாசுவதமானஸம்ஸாரத்தை அடைவதில்லை"

நித்தியமுக்தளான லக்ஷ்மீதேவியை உபாஸிப்பதற்கும் தங்களை உபாஸிப்பதற்கும் வித்யாஸம் என்னவென்று அர்ஜுனன் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் செய்த பிரசினத்திற்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறியபதிலை விமரிசை செய்தால் மஹாலக்ஷ்மிக்கும் நாராயணனுக்குமுள்ள தாரதம்மியம் நன்கு வெளியாகும். லக்ஷ்மியின் உபாஸனை மிகவும்சிரமப்பட்டு செய்யக்கூடியது. மேலும் வெகு காலத்திற்கு பின்பு விஷ்ணுவின் பிரஸாதத்திற்கு அதுகாரணமாகித்தான் பலனைக்கொடுக்கக் கூடியது. மஹாலக்ஷ்மி ஸாக்ஷாத்தாக ஸ்வதந்திரமாய் பலனைக் கொடுக்கமாட்டாள்: தன்னை உபாஸித்தவர்கள் சம்பந்தமாய் தன் பதியான நாராயணரிடம் சிபார்சு செய்து அவர் மூலமாய் விசிஷ்டமான பலனையும் கொடுக்கும்படி செய்பவள். நாராயணரை உபாசிப்பதோ அதிக சிரமத்தைக் கொடுக்கக் கூடியதாய் இல்லாதிருப்பதுடன் தாமதமின்றி பூர்ணபலனையும் நாராயணராலேயே உண்டாக்கக் கூடியது என்று பகவான் அறிவித்திருக்கிறார்.

14 अर्जुन उवाच ॥

एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।
ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥

அர்ஜுன உவாச ॥

ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே ।
யேசாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: ॥

श्रीभगवानुवाच ॥

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्तेमे युक्ततमा मताः ॥
येत्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥
क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुखं देहवद्भिरवाप्यते ॥
येतु सर्वाणि कर्माणि मयि सन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥
तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि न चिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥

ஸ்ரீபகவானுவாச ॥

மய்யாவேச்ய மனோயே மாம் நித்யயுக்தா உபஸதே ।
சிரத்தயா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா: ॥
யேத்வக்ஷரமநிர்தேச்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே ।
தே ப்ராப்னுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா: ॥
க்லேசோதிகதர ஸ்தேஷாம் அவ்யக்தாஸக்த சேதஸாம் ।
அவ்யக்தா ஹி கதிர்துக்கம் தேஹவத்பிரவாப்யதே ॥
யே து ஸர்வாணி கர்மாணி மயிஸன்யஸ்ய மத்பரா: ।
அனன்யேனைவ யோகேன மாம்த்யாந்த உபாஸதே ॥
தேஷாமஹம் ஸமுத்தர்தா ம்ருத்யுஸம்ஸாரஸாகராத் ।
பவாமி நசிராத் பார்த்த மய்யாவேசிதசேதஸாம் ॥

(அத்-12. சுலோ-1-7)

"அர்ஜுனன் பிரசினை செய்கிறார்:- ஹே சுவாமின்! முன் கூறிய படி தங்களை யார் பக்திபூர்வமாய் உபாசிக்கின்றாரோ அப்படியே யார் அக்ஷரை எனப்படுவளான சேதனப்ரகிருதியை (லக்ஷ்மிதேவியை) பக்திபூர்வமாய் உபாசிக்கின்றாரோ அவ்விருவர்களுக்குள் யார் அதிகமாய் மோக்ஷத்தின் உபாயத்தை அறிந்தவர்?"

"ஸ்ரீ கிருஷ்ணர் சொல்கிறார்:- யார் என்னிடம் மனம்வைத்து நிரந்தரமாய் கர்மம் த்யானம் முதலியவைகளால் உத்கிருஷ்டமான

சிரத்தையுடன் உபாஸிக்கிறாரோ அவர் தான் அதிகமாய் மோக்ஷத்தின் உபாயத்தை அறிந்தவர். யார் அக்ஷரையாயும் அநிர்தேசையாயும் (குறிப்பிட முடியாதவளாயும்) இருக்கும் லக்ஷ்மீதேவியை உபாஸிக்கிறாரோ அவர்கள் எல்லாப் பிராணிகளின் ஸுகத்தையும் ப்ரார்த்தித்தல் முதலான நற்குணங்கள் படைத்தவர்களாகி என்னையே அடைகின்றனர்.'' (மஹாலக்ஷ்மி வழியாய் அவர்கள் என்னிடமிருந்தே மோக்ஷபலனை அடைகின்றனரென்று தாத்பர்யம்)

[இவ்வாறு அவ்யக்தளான மஹாலக்ஷ்மியை உபாஸிப்பவர்களுக்கும் விஷ்ணுவை உபாஸிக்கிறவர்களுக்கும் முக்தியாகிய பலன் ஒன்றே என்றால் தங்களை உபாஸிப்பதுமட்டில் எப்படி மேலானதாகும் என்பதற்கு பகவான் அறிவிக்கிறார்.] ''அவ்யக்தளான மஹாலக்ஷ்மியை உபாசனை செய்யும் அதிகாரிகளுக்கு அத்யந்தமாய் அதிகமான சிரமமுண்டு. லக்ஷ்மீதேவியை உபாஸிப்பதன் வழியாய் பகவானை அடையும் வழி பிராணிகளுக்கு வெகு சிரமத்தால் ஏற்படுகிறது. யார் எல்லா வித்யுக்தமான கர்மங்களை செய்து அவைகளை என்னிடமே ஸமர்ப்பித்து நான்தான் ஸர்வோத்தமனென்று அறிந்து வேறிடம் செலுத்தாத மனதுடன் என்னையே தியானம் செய்துகொண்டு என்னை உபாசனை செய்கிறார்களோ அப்பேர்பட்டவர்களான என்னிடமே ஈடுபட்ட மனம் உள்ளவர்களை நான் சீக்கிரமே ம்ருத்யுரூபமான இந்த ஸம்ஸாரத்தினின்றும் உத்தரிக்கிறேன்.''

லக்ஷ்மீதேவியிடமுள்ள மோக்ஷத்தைக்கொடுக்கும் சக்திகூட பரமாத்மாவின் சுவாதீனமானது என்று மேற்கண்ட சுலோகங்களாலேயே தெரிகிறது. வேறிடத்திலும் ஸ்ரீ கிருஷ்ணர் அறிவித்திருக்கிறார்.

15. ब्रह्मणो हि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च ।
शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च ॥

ப்ரம்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம் அமிர்தஸ்யாவ்யயஸ்யச ।
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகாஸ்யச ॥
(அத்-14. சுலோ-27)

''நான் லக்ஷ்மீதேவிக்கும் நாசமில்லாததான முக்திவர்க்கத்திற்கும் ஸநாதனமான தர்மத்திற்கும் அப்படியே மோக்ஷத்திற்கும் நியாமகன்''

வேதாந்த சாஸ்த்ரங்களில் எந்த லக்ஷணங்களால் விஷ்ணுவே பரப்ரம்மமென்று நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறதோ அந்த அஸாதாரண தர்மங்களே தன்னிடமிருக்கின்றனவென்று ஸ்ரீ கிருஷ்ணன் நிரூபித்துக்காட்டி தான் ஸர்வோத்தமனென ஸ்தாபிக்கிறார். அஷ்டதிக்கஜங்களின் ஆதாரத்தால் ஸப்தஸமுத்ரங்கள் சூழ்ந்த இந்த பூமண்டலம் நிலைநின்றிருப்பதுபோல் சிருஷ்டியாதி அஷ்டகர்த்ருத்வ ரூபமான அஸாதாரண தர்மங்களால் பரப்பிரம்மமாகிய பகவானுடைய ஸர்வோத்தமத்தன்மை சாஸ்திரங்களில் ஸ்தாபிதமாயிருக்கிறது.

இவைகளைத்தவிர்த்து இதரதேவதைகளிடம்இல்லாதிருக்கும் அனேக அஸாதாரண தர்மங்களும் ஸ்ரீகிருஷ்ணரிடம் வியக்தமாக இருக்கின்றன. அந்த ஒவ்வொரு தர்மமும் ஸ்ரீ கிருஷ்ணரின் ஸர்வோத்தமத் தன்மைக்கு ஸாதகமானதே.

Xii நியாமகராயிருந்துகொண்டு உள்ளும் புறமும் வியாபித்தல் விஷ்ணுவின் ஸர்வோத்தமத் தன்மைக்கு ஸாதகமான லக்ஷணமென்று ओंसर्वत्रप्रसिद्धोपदेशात् ओं (ஓம் ஸர்வத்ர ப்ரஸித்தோபதேசாத் ஓம்) முதலான வேதாந்தசூத்ரங்களில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த தர்மம் ஸ்ரீகிருஷ்ணரிடம் காணப்படுகிறது.

1. वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः।

வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மகாத்மா ஸுதுர்லப: 1

(அத்-7சுலோ-19)

"வாஸுதேவன் ஸர்வத்ர வ்யாப்தனென அறியும் மஹானிருப்பது அதி துர்லபமே" இந்த சுலோகத்தில் வாஸுதேவன்தான் ஸர்வமும் என்ற தப்பான அர்த்தம் மேல்வாரியாய் தோன்றுகிறது. இதை உபதேசம் பெறும் சிஷ்யனை அர்ஜுனன் புத்திமானாதலால் ஸ்ரீ கிருஷ்ணர் எந்த அபிப்பிராயத்தைக்கொண்டு இவ்வாறு சொன்னாரென்பதை தானே அறிவித்திருக்கிறான்.

2. सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥

ஸர்வம் ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ: 1 (அத்-11 சுலோ40)

"தாம் ஸர்வத்தையும் வியாபித்திருப்பதால் தாமே ஸர்வமென்று அழைக்கப்படுகிறீர்" இதனால்தான் सर्वं खल्विदं ब्रह्म (ஸர்வம் கல்

பிதம் பிரம்ம) என்ற சுருதியை அர்ஜுனன் வியாக்யானம் செய்த தாய் ஆகும்.

3. मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ॥

மயாததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா 1

(அத்-9 சுலோ-4)

"ஸ்தாவர ஜங்கமாத்மகமான இந்த எல்லா பிரபஞ்சமும் சூக்ஷ்ம ரூபியான என்னால் வியாபிக்கப்பட்டிருக்கிறது"

4. अहमात्मा गुडाकेश सर्वभूताशयास्थितः ॥

அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசய ஸ்தித:1

(அத்-10 சுலோ-20)

"நான் ஸர்வத்ர வியாப்தனாக இருந்துகொண்டு ஸர்வப்ராணிகளின் அந்தக்காரணத்திலும் நிலை நின்றிருக்கிறேன்."

5. विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥

விஷ்டப்யாஹமிதம் கிருத்ஸனமேகாம்சேனஸ்திதோ ஜகத் 1

(அத்-10, சுலோ-42)

"பிரமாணங்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட இந்த எல்லா ஜகத்தையும் நான் என்னுடைய அனந்தமான அம்சங்களில் ஒரே அம்சத்தாலேயே வியாபித்துக்கொண்டிருக்கிறேன்."

6. नान्तं नमध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूपम् ॥

நாந்தம் நமத்யம் நபுனஸ்தவாதிம் பச்யாமி விச்வேச்வர விச்வரூபம் 1 (அத்-11 சுலோ-16)

"ஹே விச்வத்திற்கும் ஈசுவரனே! விஸ்வரூபியே! வியாபித்திருக்கும் ரூபமுடையவனே! தம்முடைய வியாபித்திருக்கும் தன்மைக்கு அதாவது வ்யாப்திக்கு ஆதியையும் மத்யத்தையும் அந்தத்தையும் அறியேன்." தாம் அபரிசின்னமான வியாப்தியுள்ளவரென்று தாத்பரியம்.

7. द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्चसर्वाः ॥

த்யாவாபிருதிவ்யோரிதமந்தரம் ஹி

வ்யாப்தம் த்வயைகேந திசஸ்ச ஸர்வா:(அத்-11, சுலோ-20)

"பூலோகமென்ன அந்தரிக்ஷலோகங்களின் மத்யபாகமென்ன இவைகளும் எல்லா திக்குகளுங்கூட தாங்கள் ஒருவராலேயே வியாபிக்கப்பட்டிருக்கின்றன."

8. **सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥**

ஸர்வம் ஸமாப்னோஷி ததோஸி ஸர்வ: ॥ (அத்-11, சுலோ-40)

"தாம் எல்லாவிடங்களிலும் வியாப்தராயிருப்பதால் ஸர்வர் எனப் படுகிறீர்."

9. **लोके सर्वमावृत्य तिष्ठति ॥**

லோகே ஸர்வமாவிருத்ய திஷ்டதி (அத்-13, சுலோ-14)

"பரபிரம்மம் ஸர்வத்தையும் வியாபித்திருக்கிறார்."

10. **बहिरन्तश्च भूतानाम् ॥**

பஹிரந்தஸ்ச பூதானும் (அத்-13, சுலோ-16)

'பிரபிரம்மம் பிராணிகளின் உள்ளும் புறமும் வியாபித்திருக்கிறார்".

11. **दूरस्थं चान्तिके च तत् ॥**

தூரஸ்தம் சாந்திகே ச தத் (அத்-13, சுலோ-16)

"பரபிரம்மம் (ஸ்ரீகிருஷ்ணர்) ஸர்வத்திலும் இருப்பதால் தூரத்தி லேயும் ஸமீபத்திலேயும் இருப்பவர்."

12. **हृदि सर्वस्य विष्ठितम् ॥**

ஹிருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் (அத்-13, சுலோ-18)

"பரபிரம்மம் எல்லா பிராணிகளின் ஹிருதயப்ரதேசத்தில் விசேஷ மாய் இருப்பவர்."

13. **सर्वस्य चाहं हृदि सन्निविष्टः ॥**

ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட: (அத்-15, சுலோ-15)

"நான் எல்லோருடைய ஹிருதயத்திலேயும் ஸாந்நித்யம் பெற்றி ருக்கிறேன்."

14. **ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ॥**

ஈசுவர: ஸர்வபூதானும் ஹிருத்தேசேர்ஜுனதிஷ்டதி

(அத்-18, சுலோ-61)

"அர்ஜுனு! ஈசுவரன் (நான்) எல்லாப் பிராணிகளின் ஹிருதயப் பிரதேசத்திலேயும் நிலைபெற்றிருக்கிறேன்."

பிரம்மாதி தேவதைகளிடம் மேற்கண்டபடிக்குள்ள ஸர்வகத த்வம் அதாவது எங்குமிருக்கும் தன்மை இருந்துவருவதில்லை.

15. पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥
इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥

பச்யாதித்யான் வஸூன் ருத்ரான் அச்விநௌ மருதஸ்ததா ।
பஹூன்யதிருஷ்டபூர்வாணி பச்யாஸ்சர்யாணி பாரத ॥
இஹைகஸ்தம் ஜகத்கிருத்ஸ்னம் பச்யாத்ய ஸசராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சான்யத்த்ரஷ்டுமிச்சஸி ॥

(அத்-11, சுலோ-6—7)

"ஹே பாரதனே! ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள் அச்வினீ தேவர்கள், மருத்கணங்கள் இவர்களேயும் இதற்குமுன் பார்க்கப் பட்டிராத ஸகலமான அற்புத வஸ்துக்களேயும் ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸகல பிரபஞ்சத்தையும் விச்வரூபம் படைத்துள்ள என் சரீரத்தில் ஓர் பாகத்திலிருப்பதைப் பார்" என்றார் ஸ்ரீகிருஷ்ணர். அர்ஜுனனும் அவ்வாறே கண்டுகொண்டிருக்கிறார்.

16 तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥

தத்ரைகஸ்தம் ஜகத்கிருத்ஸ்னம் ப்ரவிபக்தமனேகதா ।
அபச்யத்தேவ தேவஸ்ய சரீரே பாண்டவஸ்ததா ॥

(அத்-11, சுலோ-13)

"பாண்டுபுத்திரனை அர்ஜுனன் அப்பொழுது தேவதேவனை ஸ்ரீகிருஷ்ணருடைய சரீரத்தில் பல பேதங்களாய் வகுக்கப்பட்டிருக்கும் இந்த எல்லா ஜகத்தும் ஓர் பாகத்திலிருப்பதாய் (வியாப்தமான ஆகாயத்தில் ஓர் கொசு இருப்பதுபோல்) கண்டான்."

17. पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥

பச்யாமி தேவாம்ஸ்தவ தேவதேஹே ஸர்வாம்ஸ்ததாபூதவிசேஷ ஸங்கான் ।
பிரம்மாணமீசம் கமலாஸனஸ்தமிருஷீம்ஸ்ச ஸர்வாநுரகாம்ஸ்ச திவ்யான் ॥ (அத்-11, சுலோ-15)

" ஹே தேவா ! தம்முடைய சரீரத்தில் நான் எல்லாதேவதைகளை யும், ப்ராணிசமூகங்களையும், பிரம்மதேவனையும், ருத்திரனையும், எல்லா ரிஷிகளையும், ஸர்ப்பங்களையும் காண்கின்றேன். "

12-வது அத்தியாயம் 3-வது சுலோகத்திலுள்ள **सर्वत्र** (ஸர்வத்ரகம்) என்ற பதத்தால் லக்ஷ்மீதேவி ஸர்வத்ர வியாபித்தி ருப்பவளென நிச்சயமானாலும் அந்த அம்மாளுக்குள்ள ஸர்வகத த்வம் (எங்குமிருக்கும் தன்மை) அக்ஷரத்வம் (நாசமற்றிருக்கும் தன்மை) அவ்யக்தத்வம் (வியக்தமாயில்லாதிருக்கும் தன்மை) அசிந்த்யத்வம் (எண்ணமுடியாமலிருக்கும் தன்மை) அநிர்தேச்ய த்வம் (குறிக்கப்படாமலிருக்கும் தன்மை) முதலிய குணங்கள் பிரம்மாதி தேவர்களிடமும் இல்லாதிருப்பவைகள். அவனுடைய பதியான பரமாத்மாவுக்கு அடங்கியவைகளாய் இருக்கின்றன. இந்த விஷயத்தில் அனேக பிரமாணவசனங்களிருந்துவருகின்றன.

18. **ब्रह्मणो हि प्रतिष्ठाऽहम् ।**

பிரம்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம் । (அத்-14. சுலோ-27)

" நான் மஹாலக்ஷ்மிக்கும் ஆதாரன் "

19. **मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।**

மயாத்யக்ஷேண ப்ரகிருதி: ஸூயதே ஸசராசரம் ॥

(அத்-9. சுலோ-10)

"அதிபதியான என்னால் ப்ரேரிபிக்கப்பட்டவளாய் சேதனப்ரகிருதி சராசரமான ஜகத்தை சிருஷ்டிக்கிறாள்."

20. **मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम् ।**

மம யோனிர் மஹத் ப்ரம்ஹ தஸ்மின் கர்ப்பம் ததாம்யஹம்।

(அத்-14. சுலோ-3)

"லக்ஷ்மிதேவி என்னுடைய பார்யாள் (க்ஷேத்திரமாயிருப்பவள்) அவளிடம் நான் கர்ப்பத்தைத் தருகிறேன்"

21. **मत्तः सर्वं प्रवर्तते ।**

மத்தஸ்ஸர்வம் பிரவர்த்ததே । (அத்-10, சுலோ-8)

" என்னால் ஸர்வமும் பிரவிருத்திக்கிறது "

இவ்வாறு பிரமாணங்களிருப்பதைக்கொண்டு ஸ்வாதந்தர்யமாய் ஸர்வத்ர வ்யாப்தராயிருப்பவர் நாராயணர் ஒருவரே தான். ஆகையால் தான் அவரே ஸர்வோத்தமனென நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

ஸர்வகதனன பரமாத்மாவுக்கு நாநாபதார்த்தங்களின் சம்பந்தம் இருப்பதன் நிமித்தம் அவைகளின் குணதோஷங்களின் சம்பந்தம் உண்டோவெனில் அது இல்லையென்று ஸ்ரீ கிருஷ்ணரே அறிவித்துள்ளார்.

22. शरीरस्थोऽपि कौन्तेय न करोति नलिप्यते ॥।
यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ।

சரீரஸ்தோபி கௌந்தேய நகரோதி ந லிப்யதே ||
யதாஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாதாகாசம் நோபலிப்யதே ||
ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே ||
(அத்-13. சுலோ-32)

" பரமாத்மா (ஸ்ரீ கிருஷ்ணன்) சரீரிகளின் சரீரத்திலேயே இருந்தாலும் பலனில் அபேக்ஷையுடன் கர்மாக்களை செய்கிறதில்லை ஜீவன் செய்யும் கர்மத்தின் சம்பந்தமும் அவருக்கில்லை. ஜீவனுடைய சரீரத்திலுள்ள தோஷங்களின் சம்பந்தமும் அவருக்கில்லை. அசுத்தமான பிரதேசங்களில் ஆஹாயம் (இடைவெளி) சம்பந்தப்பட்டிருந்தாலும் அது மிக்க சூக்ஷ்மமான திரவியமாயிருப்பதால் எப்படி அந்தந்த வஸ்துக்களின் குணதோஷங்களின் சம்பந்தம் இல்லாமலிருந்து வருகிறதோ அப்படித்தான் ஸர்வத்ர வியாபகனாகி ஜீவர்களின் சரீரங்களிலேயும் வியாபகரான பரமாத்மாவுக்கு அந்த சரீரங்களின் சம்பந்தத்தால் குணதோஷ சம்பந்தமில்லை. (சுகம் துக்கம் இவைகளை அவர் அடைவதில்லை.)"

Xiii புருஷசூக்தத்தில் சொல்லப்படும் தன்மை எல்லா வேதங்களிலேயும் சொல்லப்படும் பரபிரம்மத்திற்குத்தான் பொருந்தும். அந்த தர்மம் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவிடம் காணப்படுவதால் ஸ்ரீகிருஷ்ணர்தான் பரபிரம்மமாவார். அவர்தான் ஸர்வோத்தமவஸ்துவென்று நிச்சயிக்கலாம். புருஷசூக்தத்தில் சொல்லப்பட்டிருக்கும் பகவத்ரூபம்தான் ஸ்ரீ கிருஷ்ணரால் காட்டப்பட்ட விச்வரூபமாகும்.

1. पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥

பச்யமே பார்த்த ரூபாணி சதசோத ஸஹஸ்ரச: ।
நாநாவிதானி திவ்யானி நாநாவர்ண கிருதீனிச ॥

(அத்-11. சுலோ-5)

"ஹே அர்ஜுனனே! அப்ராகிருதமான நாநாவகையுள்ள நாநு வர்ணங்களும் பலவகை உருவ பேதங்களுமுள்ளவைகளான எண்ணிறைந்த என் ரூபங்களைப் பார்."

2. दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ।
अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ॥
सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ॥

தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் ।
அனேகவக்த்ரநயன மனேகாத்புத தர்சனம் ॥
ஸர்வாஸ்சர்யமயம் தேவமனந்தம் விச்வதோ முகம் ॥

(அத்-11. சுலோ-9, 11)

"ஸ்ரீஹரி அர்ஜுனனுக்கு யதார்த்தமாயும் நினைக்க முடியாததாயும் ஈசுவர சம்பந்தமுமுள்ள தம்முடைய விச்வரூபத்தைக்காட்டினார். அந்த ரூபம் அனந்தமான முகங்களுள்ளது. அனந்தமான கண்களைக் கொண்டது. அனந்தமான ஆச்சரியங்களைக்கொண்டது. ஸர்வாஸ்சர்யமயமானது. க்ரீடாதி குணங்களைக்கொண்டது. (தேசத்தாலும் காலத்தாலும் குணத்தாலும்)அபரிச்சின்னமானது. மேலும் அனந்தமான முகங்களுடன் கூடியது."

3. अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।

அனேக பாஹூதரவக்த்ர நேத்ரம் பச்யாமி த்வாம் ஸர்வ
தோ நந்தரூபம் ॥

4. नान्तं नमध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूपम् ।

நாந்தம் நமத்யம் நபுனஸ்தவாதிம் பச்யாமி விச்வேச்வர
விச்வரூபம் ॥

5. अनादिमध्यान्तमनन्तवीर्यमनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदंतपन्तम् ॥

அநாதிமத்யாந்தமனந்த வீர்யம் அனந்தபாஹும் சசி
ஸூர்ய நேத்ரம் ।
பச்யாமித்வாம் தீப்தஹுதாச வக்த்ரம் ஸ்வதேஜஸா
விச்வமிதம் தபந்தம் ॥

6 रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम् ।
बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाऽहम् ॥

ரூபம்மஹத்தே பஹுவக்த்ரநேத்ரம் மஹாபாஹோ பஹு
பாஹூருபாதம் ।
பஹூதரம் பஹுதம்ஷ்ட்ராகராளம் த்ருஷ்ட்வா லோகா:
ப்ரவ்யதிதாஸ்ததாஹம் ॥ (அ-11. சுலோ-61, 23)

"அனேக பாஹுக்கள், உதரங்கள், முகங்கள், அப்படியே கண்கள் இவைகள் வியாபித்த அபரிமிதமான ரூபங்களுள்ள தங்களைக் காண்கிறேன். ஹே விசுவரூபனே! நீ தேசத: ஆதி மத்யம் அந்தம் இவைகளில்லாதவர். (ஸர்வத்ர வியாப்தராயிருப்பவர்) ஆதிமத்யாந்தரஹிதமானவரும் (நித்யமானவரும்) அபரிமிதமான வீரியம் படைத்தவரும், அனந்தமானபாஹுக்களைக்கொண்டவரும், சூரியன் சந்திரன் இவர்களையே கண்களின் ஸ்தானத்தில் கொண்டவரும், (சூர்ய சந்திரர்கள் பரமபுருஷனுடைய நேத்ரங்களில் உற்பன்னர்கள். அப்படியே பகவானுடைய நேத்ரங்களை ஆசிரயித்திருக்கின்றனர்.) தேஜஸ்வியானவரும், அக்னிபகவானை உண்டாக்கியதும் அவருக்கு ஆசிரயமானதுமான முகங்களுள்ளவரும் தம்முடைய தேஜஸ்ஸால் ஸகல ஜகத்தையும் தபித்து வருகிறவருமான தங்களைக் காண்கிறேன். ஹே பராக்ரமசாலியான பகவானே! தம்முடைய அனந்தமான முகங்கள் அனந்தமான நேத்ரங்கள் அனந்தமான பாஹுக்கள் அனந்தமான தொடைகள் அனந்தமான பாதங்கள் அனந்தமானவயிறுகள் மேலும் பயங்கரமான அனேக கடைவாய் பற்கள் இவைகளைக்கொண்ட தம்முடைய பெரும் ரூபத்தைக் கண்டு எல்லாவுலகத்தவர்கள் பயந்திருக்கின்றனர். நானும் பயந்திருக்கிறேன்."

7. सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥

ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோக்ஷி சிரோமுகம் ।
ஸர்வத: சுருதிமல்லோகே ஸர்வமாவிருத்யதிஷ்டதி ॥
(அத்-13. சுலோ-14)

"பரபிரம்மம் (ஸ்ரீ கிருஷ்ணர்) ஒவ்வொரு ரூபத்திலேயும் அனந்தமான கைகள், கால்கள், அனந்தமான நேத்ரங்கள், அனந்தமான சிரசுகள் அனந்தமான முகங்கள் மேலும் அனந்தமான காதுகள் இவைகளைக்கொண்டவர்.".

Xiv எல்லாவேதங்களிலும் உபநிஷத்துக்களிலும் நிரூபிக்கப் பட்டிருத்தல் ஸர்வோத்தமவஸ்துவான பரப்பிரம்மத்தின் லக்ஷணமென்று **सर्वे वेदा यत्पदमामनन्ति** (ஸர்வே வேதா யத்பதமாமநந்தி) முதலானசுருதிகளிலேயும் **ओं तत्तु समन्वयात् ओं** (ஓம் தத்துஸமன்வயாத்ஓம்), முதலானபிரம்மசூத்திரங்களிலேயும் பிரசித்தமாயிருக்கிறது. அந்த லக்ஷணம் தம்மிடமிருப்பதாய் ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லிக் கொண்டிருக்கிறாராதலால் அவரே பரப்பிரம்மம் (ஸர்வோத்தமர்) ஆவாரென்று சித்திக்கிறது.

1. **वेदैश्च सर्वैरहमेव वेद्यः ।**

வேதைஸ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:। (அத்-15. சுலோ15)

"பிராம்மணம், உபநிஷத்து, மந்திரம் இவைகளைக் கொண்ட எல்லா வேதங்களிலும் நான்தான் பரம முக்ய விருத்தியால் சொல்லப்படுகிறேன்."

2. **अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः !**

அதோஸ்மி லோகே வேதேச ப்ரதித: புருஷோத்தம: ।
(அத்-15. சுலோ 18)

"ஆகையால்தான் நான் பாரதம் முதலான எல்லா பௌருஷேய க்ரந்தங்களிலேயும் அப்படியே வேதங்களிலேயும் புருஷோத்தமனென்று பிரசித்தனுயிருக்கிறேன்."

3. **ऋषिभिर्बहुधा गीतं छंदोभिर्विविधैः पृथक् ।**
**ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितम् ॥**

ரிஷிபிர்பஹுதா கீதம்சந்தோபிர்விவிதை: ப்ருதக் I
பிரம்மஸூத்ரபதைஸ்சைவ ஹேதுமத்பிர்விநிஸ்சிதம் II
(அத்-13. சுலோ-5)

“ரிஷிகளால் (க்ஷேத்ரங்களேயும் அவைகளின் மாறுபாடுகளேயும் பிரேரிக்கும் பகவானேப்பற்றியும் அவருடைய பிரபாவத்தைப்பற்றியும், பலவகையாய் (பரஸ்பரம் விருத்தமாய்) சொல்லப்பட்டிருக்கின்றன. வேதார்த்தங்களே நிச்சயிக்கக்கூடிய யுக்திகளுடன்கூடிய பிரம்மசூத்திரங்களால்நிர்ணயிக்கப்பட்டுள்ளஅர்த்தமுள்ளஅனேக வேதங்களால் பகவத்ஸ்வரூபமானது தனித்தனியே கூறப்பட்டிருக்கிறது.” வேதவேதாந்தங்களால் கூறப்பட்டவனென்று அர்த்தத்தைத் தரும் கோவிந்தனென்ற ஸ்ரீ கிருஷ்ணருக்கிருந்துவரும் நாமமும் இந்த விஷயத்தில் பிரமாணமாகும்.

XV. ப்ரணவத்தால் சொல்லப்பட்டிருத்தல் ஸர்வோத்தம வஸ்துவான பரப்ரம்மத்தின் லக்ஷணமென்று வேதத்தில் மிகவும் பிரசித்தமாயிருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ணர் தாம்தான் ப்ரணவத்தால் ப்ரதிபாத்தியரென சொல்லிக்கொண்டிருக்கிறார். **प्रणवः सर्ववेदेषु** (ப்ரணவ: ஸர்வவேதேஷு) என்றால் ப்ரணவமானது ஸர்வவேதங்களின் ஸாரபூதமானது. அதாவது ஸர்வ வேதார்த்தங்களேயும் அடக்கிக்கொண்டது என்று தாத்பர்யம். எல்லா வேதங்களால் வ்யாக்யானம் செய்யப்படுவதாயுள்ள ஸர்வவேதவ்யாக்யேய ரூபமான இப்பேர்ப்பட்ட ப்ரணவத்தால் ஸ்ரீகிருஷ்ணர் சொல்லப்படுகிறாரென்றால் ஸ்ரீ கிருஷ்ணர் எல்லா வேதங்களாலும் சொல்லப்படுகிறாரென்பது நிச்சயமாய் ஏற்படும். ஸ்ரீ கிருஷ்ணர் சொல்வதாவது:—

1. **ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।**
**यःप्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥**

ஓமித்யேகாக்ஷரம் பிரம்ம வ்யாஹரன்மாமனுஸ்மரன் I
ய: ப்ரயாதித்யஜன் தேஹம் ஸயாதி பரமாம் கதிம் II
(அத்-10. சுலோ-13)

‘‘ஓம் என்ற ஒரு அக்ஷரத்தில் அடங்கியிருக்கும் எல்லாவேதங்களேயும் (அனந்தமான வேதங்களின் அத்யந்த ஸங்கிரஹரூபமான ஓம் என்ற அக்ஷரத்தையும்) உச்சரித்துக்கொண்டு அதே சமயத்தில் மனதிலும்என்னே(ஸ்ரீ கிருஷ்ணரை)த்யானம்செய்துகொண்டு

யார் சரீரத்தை த்யாகம் செய்வரோ அவர் முக்தர்" இந்த ஸ்தலத்தில் தம்முடைய ரூபத்தை த்யானம் செய்துகொண்டு ஓம் என்று ஜபம் செய்யவேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லிக்கொண்டிருப்பதால் ஸ்ரீ கிருஷ்ணர் ஓம்காரப்ரதிபாத்யரென்பது சித்திக்கிறது. ஓம் என்பதால் இதாாள் சொல்லப்படுவாாாகில் ஸ்ரீ கிருஷ்ணரைப் பார்த்துக்கொண்டே இதாாளை ஒருவன் கூப்பிடும்பக்ஷத்தில் ஸ்ரீகிருஷ்ணர்எப்படி அவனுக்கு முக்தியைத்தருபவராய்ஆவார்? ஆதலால் ஓம் என்பதால் ஸ்ரீ கிருஷ்ணரே சொல்லப்படுவார்.

**2. वेद्यं पवित्रमोंकार ऋक्साम यजुरेव च ।**

வேத்யம் பவித்ரமோங்கார ரிக் ஸாம யஜுரேவச ॥

(அத்-9. சுலோ-17)

"நான் அறியப்படவேண்டிய வஸ்து ஜகத்திற்கு பவித்ரமானவன் ப்ரணவத்தால் ப்ரதிபாத்யன். ரிக்வேதம் ஸாமவேதம் யஜுர்வேதம் இவைகளுக்கு நியாமகன். அவைகளால் சொல்லப்படுபவனுயுமிருக்கிறேன்,"

**3. ओं तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।**

"ஓம் தத் ஸதிதி நிர்தேசோ ப்ரம்ஹணஸ்திரிவித:ஸ்மிருத:

(அத்-7. சுலோ-23)

"பரப்பிரம்மனுக்கு ஓம் என்றும் தத்என்றும் ஸத்என்றும் மூன்று வகையாய் பெயர் உண்டு."

Xvi. நிர்குணத்வம் (ப்ரகிருதி ஸம்பந்தமில்லாதிருத்தல்) **ओं अरूपवदेव हि तत्प्रधानत्वात् ओं** (ஓம் அரூபவதேவஹி தத் ப்ரதானத்வாத் ஓம்) முதலான பிரம்மசூத்திரங்களில் ஸர்வோத்தமனுன பரபிரம்மத்திற்கு உள்ள லக்ஷணமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த அஸாதாரணமான தர்மம் தம்மிடம் இருப்பதாய் ஸ்ரீ கிருஷ்ணர் சொல்லிக்கொள்ளுகிறுர்.

**1. स्थित्वा स्यामन्तकालेऽपि ब्रह्म निर्वाणमृच्छति ।**

ஸ்தித்வாஸ்யாமந்தகாலேபி பிரம்ம நிர்வாணமிச்சதி ।

(அத்-2. சுலோ-72)

"தேஹத்தைவிடும்பொழுது ஞானமுள்ளவனுய் பகவத்ஸ்மாணையைக் கொண்டிருந்தால் ப்ராகிருத சரீரமில்லாத பரப்ரம்மத்தை என்னை அடைவாய்' **मामनुस्मरन् । यःप्रयातित्यजन् देहं सयाति**

**परमाङ्गतिम्** (மாமனுஸ்மரன் ] ய: ப்ரயாதித்யஜன்தேஹம் ஸயாதி பரமாம் கதிம் ]]) என்று எட்டாவது அத்தியாயத்தில் சொல்லப் பட்டிருக்கும் சுலோகத்தின்படி இங்கு சொல்லப்பட்டிருக்கும் நிர்வாணபிரம்மம் ஸ்ரீ கிருஷ்ணர்தான் ஆவார்.

வினா 5. "**निर्वाणं**" (நிர்வாணம்)என்றால் சரீரமில்லாதவனென்று பொருள். எவ்வகையிலும் அவர் சரீரமில்லாதவரென்று சொல்லாமல் இந்த இடத்தில் அவர் ப்ராகிருதமான சரீரமில்லாதவர் என்று நிர்வாண சப்தத்திற்கு அர்த்த ஸங்கோசத்தை அதாவது அர்த்தத்தைக் குறுக்கிச் சொல்லவேண்டியதேன் ?

விடை. எவ்வகையிலும் சரீரமில்லாதவஸ்துவொன்றுகிடையவே கிடையாது. முயற்கொம்புபோல் அப்ரஸித்தமானது. சரீரமில்லாதவன்கண்ணுக்குப்புலப்படமாட்டான். அவனைப்பார்க்கவும் முடியாது. ஸ்ரீ கிருஷ்ணரோ அர்ஜுனனுடைய கண்ணுக்குப் புலப்பட்டிருக்கிறார். தவிரவும் திவ்யதிருஷ்டியால் அவரை அர்ஜுனன் பார்க்கும்பொழுதும் ஸ்ரீகிருஷ்ணர் சரீரமுள்ளவராகவே தென்பட்டார். "**पश्यामि देवांस्तव देव देहे सर्वान्**" (பச்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே ஸர்வான்) "ஹே தேவா ! தங்கள் சரீரத்தில் தேவதைகளை நான் காண்கிறேன்" என்று அர்ஜுனன் சொல்லியிருக்கிறார். அவ்வளவுமட்டிலுமல்ல **अनन्तबाहूदरवक्त्रनेत्र** (அனந்தபாஹூதர வக்த்ரநேத்ரம்) **सर्वतः पाणिपादं** (ஸர்வத: பாணிபாதம்) முதலான வாக்யங்களால் பரபிரம்மமாகிய ஸ்ரீ கிருஷ்ணர் புஜம், வயிறு, கைகால்கள் முதலான அவயவங்களுள்ளவரென்று நிச்சயமாகிறது.

வினா 6:- ஸ்வாமிகளே ! எங்களைப்போலவே பரமாத்மாவுக்கும் சரீரமிருக்கும்பக்ஷத்தில் துக்கம் முதலியவை எங்களுக்கு இருப்பதுபோல் அவருக்கும் வந்து சேரவேண்டுமல்லவா ?

விடை:- எங்களுக்கிருந்துவரும் சரீரம் பரமாத்மாவுக்கு இருந்தால் எங்களைப்போல் துக்காதிகளும்பரமாத்மாவுக்கும் வந்து சேரும். பரமாத்மாவுக்கிருக்கும் சரீரமோ "திவ்யமானது" அதாவதுலோகவிலக்ஷணமானது. **पश्य मे पार्थ रूपाणि......नानाविधानि दिव्यानि, जन्म कर्म च मे दिव्यं** (பச்ய மே பார்த்தரூபாணி...... நாநாவிதாணி திவ்யானிஜன்ம கர்ம ச மே திவ்யம்) முதலான பிர

மாணங்களால் இந்த விஷயம் சித்திக்கிறது. 2. என்னை மனுஷ்ய சரீரம்போலுள்ள சரீரத்தைக் கொண்டவனென்று அறிபவர் மூடரேயாவரென்று " **अवजानन्ति मां मूढाः** " (அவஜாநந்தி மாம் மூடா:) முதலான சுலோகங்களில் பகவான் சொல்லி இருக்கிறார். 3. தவிரவும் துக்கத்திற்குக்காரணபூதங்களான அபூர்ணதை (பூர்ணமாயில்லாதிருக்கும் தன்மை) அல்பசக்தி, குணசம்பந்தம், கர்மபந்தம் முதலியவைகள் பரமாத்மாவிடம் திண்ணமாய் இல்லையென்று "**नानवाप्तमवाप्तव्यं, अनन्तवीर्यामितविक्रमस्त्वं, गुणेभ्यश्चपरं वेत्ति । मद्भावं, न मां कर्माणि लिम्पन्ति ।।** நாநவாப்தமவாப்தவ்யம்; அநந்தவீர்யாமித விக்ரமஸ்தவம்; குணேப்யஸ்ச பரம் வேத்தி மத்பாவம்; ந மாம் கர்மாணி லிம்பந்தி) முதலிய அனேக வாக்யங்களால் சித்திக்கிறது. இந்த ரீதிப்படி சங்கித்தால் பரமாத்மாவுக்கு போக்கு வரவு முதலான க்ரியைகளுண்டோ இல்லையோவென்ற பிரச்னை எழும். அவை உண்டு என்றால் அவருக்கு விகாரம் (வேறுபாடு) உண்டென்று ஒப்புக்கொள்ள வேண்டியதாகும். இல்லையென்றால் அவர் சிருஷ்டியாதிகளைச் செய்வதாய் (அதாவது சிருஷ்டியாதிகளின் கர்த்ருத்வம்) ஏற்படாது. இவ்வாறு செய்யப்படும் துர்வாதங்களும் மேற்கண்ட வாக்யங்களால் அடங்கிப்போகின்றன. **जन्म कर्म च मे दिव्यम्** (ஜன்ம கர்ம ச மே திவ்யம்) என்ற ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவின் வசனரூபமான அஸ்திரம் எல்லாவகைக்கற்பனைகளையும்கொளுத்திவிட்டு ஸ்ரீகிருஷ்ணர்பூர்ணரென்பதை (அவருடைய பூர்ணத்வத்தை) ஸம்ரக்ஷித்துக்கொடுப்பதில் சாமர்த்தியம் பெற்றிருக்கிறது. இதனால்தான், பரமாத்மா நிஷ்க்ரியன் நிர்க்குணன் என்று கூறிவரும் சுருதிகளுக்கு அவர் பிராகிருதமான கிரியையில்லாதவர் பிராகிருதமான குணமில்லாதவர் என்று அர்த்தம்செய்யவேண்டியதாகும்.

2. **स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ।**

ஸயோகீ பிரம்ம நிர்வாணம் பிரம்மபூதோதிகச்சதி I

(அத்-5. சுலோ 25)

"அந்த யோகியானவன் பிரம்மத்திடம் ஸதா இருந்துகொண்டு (ஸதா அவன் ஞானமுள்ளவனாய்) முடிவில் நிர்வாண பிரம்மத்தை (ப்ராகிருதமான சரீரமில்லாத பிரம்மத்தை [கிருஷ்ணரை] அடைகிறார்."

3. लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।

லபந்தே ப்ரம்மநிர்வாணமிருஷய: க்ஷீணகல்மஷா: ॥

(அத்-5. சுலோ-35)

"ஞானிகள் எல்லா சம்சயம் விபரீதஞானம் முதலியவைகளில்லாமல் சரீரத்தை விட்டபின் ப்ராகிருதமான சரீரமில்லாத பிரம்மத்தை (என்னை) அடைகின்றனர்." பிரம்மம் எவ்வகையிலும் சரீரமில்லாதவனுகில் அவரைப் பக்தர்கள் அடைவதெப்படி? சரீரமில்லாதவனுக்கு ப்ராப்யத்வம் (அடையப்படும் தன்மை) கூடாது. இன்னமும் ஸ்ரீ கிருஷ்ணர் அறிவிப்பதாவது.

4. आदित्यवर्णं तमसः परस्तात् ।

ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ।  (அத்-8. சுலோ-9)

"சூரியனைப்போல் வர்ணமுள்ளவராய், தமஸ்ஸென்ற சப்தத்தால் சொல்லப்படுபவளான ப்ரகிருதியால் வெகு விலக்ஷணராய்" பிரகிருதிசம்பந்தமில்லாதவரான பரமபுருஷனை (என்னை) மரண காலத்தில் த்யானம் செய்வர் முக்தராகின்றனர். [சற்றேனும் சரீரமில்லாதவருக்கு வர்ணங்கள் எவ்வாறு உண்டாயிற்று? ஆகையால் ஜடத்தின் ஸம்பந்தமில்லாமலிருப்பினும் அந்த பிரம்மம் விலக்ஷணமான தேஜோரூபியென்று சித்திக்கிறது] பதினொன்றுவது அத்தியாயத்திலும், பகவான்— पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः । नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ பச்ய மே பார்த்த ரூபாணி சதசோத ஸஹஸ்ரச: । நாநாவிதானி திவ்யானி நாநாவர்ணாகிருதீனிச ॥ "ஹே அர்ஜுன! நானுவகையாயும் அப்ராக்ருதமாயும் லோகவிலக்ஷணமாயுமுள்ள நாநாவர்ணங்கள் என்ன, நாநாஉருவங்கள் என்ன இவைகளைக்கொண்ட என்னுடைய அனந்தமான ரூபங்களைப் பார்" என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார்.

5. अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥

அநாதிமத்பரம் பிரம்ம ந ஸத்தந்நாஸதுச்யதே ।

(அத்-13. சுலோ-12)

"பரப்ரம்மம் (ஸ்ரீ கிருஷ்ணர்) உற்பத்தியுள்ள ப்ராக்ருதமான தேஹம் இந்திரியம் குணம் கர்மம் இவைகளில்லாதவன். அவர்காரிய

ரூபமான பிரபஞ்சத்திலும் காரணரூபமான (அவியக்தாதி) பிரபஞ்சத்திலும் சேர்ந்தவரன்று'' அவர் கொஞ்சமேனும் ப்ரகிருதி சம்பந்தமில்லாத சரீரம் இந்திரியம் குணம் கர்மம் இவைகளைக்கொண்டவரென்று பொருள்.

6. सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥

*ஸர்வேந்திரிய குணாபாஸம் ஸர்வேந்திரிய விவர்ஜிதம் ।*
*அஸக்தம் ஸர்வபிருச்சைவ*நிர்குணம் குணபோக்த்ருச ॥*
(அத்-13. சுலோ-14)

''பரபிரம்மம் எல்லா இந்திரியங்களையும் இந்திரியங்களின் விஷயங்களையும் அறிந்தவர். [இதனால் அவருக்கும் இந்திரியங்களிருந்திருக்க வேண்டுமென்று சித்தித்துவிட்டது.] அவர் ஸர்வேந்திரியங்களிலுமில்லாதவர். அவர் நிஸ்ஸங்கரென்றால் எதன் சம்பந்தமும் இல்லாதவர். அவர் எல்லாவற்றையும் தரித்தவர். [இதனால் எல்லாவஸ்துக்களின் சம்பந்தத்தையும் அவர் பெற்றவரென்று சொன்னதுபோலாயிற்று.] அவர் நிர்குணன். தவிரவும் அவர் குணபூர்ணன். (மூலத்திலுள்ள ச என்றபதம்இதைஅறிவிக்கிறது)

இந்த வாக்யத்தில் பகவான் இந்திரியமில்லாதவரென்றும் சொல்லப்படுகிறது, இந்திரியமுள்ளவரென்றும் சொல்லப்படுகிறது. அப்படியே எதன் சம்பந்தமும்இல்லாதவரென்றும், எல்லாவற்றின் சம்பந்தமும்பெற்றவரென்றும் சொல்லப்படுகிறது. தவிரவும் ஸர்வகுணங்களும் இல்லாதவரென்றும் குணங்களால்பூர்ணரென்றும்சொல்லப்படுகிறது. இப்படிக்குஒருவருக்கேவிருத்தமான தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால்தான் இந்திரியமில்லாதவரென்பதற்கு லோகப்ரசித்தமாயுள்ள துஷ்டமான இந்திரியங்களில்லாதவரென்றும்,எதன் சம்பந்தமுமில்லாதவரென்பதற்கு உலகில் ஜனங்களுக்கிருந்துவருவதுபோல் ஆயாஸத்தையும் தோஷ

---

* இந்த சுலோகத்தின் வியாக்யானத்தில் ஸ்ரீ சங்கராசாரியாளும் கூட गुणाः सत्वरजस्तमांसि तैः रहितं निर्गुणं ஸத்வரஜஸ் தமோகுணங்களில்லாததால் பரமாத்மா நிர்குணராவார் என்று அர்த்தம் செய்திருக்கிறார். இப்படிக்கே எல்லாவிடங்களிலும் வியாக்கியானம் செய்து உண்மையைப்பரிசீலனை செய்திருந்தால் நலமாயிருந்திருக்கும்.

த்தையும் கொடுக்கும் இந்திரியங்களின் சம்பந்தம் அவருகில்லை என்றும், ஸர்வகுணமில்லாதவரென்பதற்கு உலகில் காணப்படுவதாயுள்ள ப்ரகிருதி சம்பந்தப்பெற்ற குணங்களில்லாதவரென்றும் தான் அர்த்தம் செய்யவேண்டும். இவ்வாறு அர்த்தம் செய்யப்படாவிடில் ஸர்வக்ஞராயுள்ள ஸ்ரீகிருஷ்ணபகவானின் வாக்யங்கள் பரஸ்பரம் முறண்பட்டவைகளாய் பித்தன் பிதற்றலுக்கு ஒத்ததாய் ஆகும்.

விஞ:- பரப்பிரம்மம் சொரூபத்தால் நிர்குணர். இப்பொழுது அவர் ஸகுணப்ரம்மராயிருக்கிறரென்று ஏன் அர்த்தம் செய்யலாகாது.

விடை:- இந்தவிடத்தில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் "நானே நிர்குணர், நானே ஸகுணன் என்றறிவிக்க " ச " என்று ஸமுச்சயத்தை (கூடுதலை) அர்த்தமாகக்கொண்டதான சப்தத்தை உபயோகப்படுத்தியிருக்கிறர். மேலும் நிர்குணப்ரம்மமொன்று இருப்பதாகில் "குணமில்லாதிருத்தல்" என்பதில் " இருத்தல் " என்ற குணத்தை ஒப்புக்கொள்ளவேண்டிவரும். அப்பொழுது நிர்குணனென்றுசொல்லிவிட்டுகுணமிருப்பதாய்ஒப்புக்கொண்டால் "நான் மலடியின் மகன்" என்றவாக்யம்போல் ஒன்றுக்கொன்றுவிருத்தமானதான வாக்யமாகும். தவிரவும் இந்த கல்பனை அப்ரமாணமானதாகும். ஆகையால்தான் மேற்கண்ட வாக்யங்களிலுள்ள விரோதத்தை நிரவகாசமான இதரப்ரமாணங்களை அனுஸரித்து நீக்கவேண்டும். ஸ்ரீ கிருஷ்ணர்தான் பரப்ரம்மமென்பதற்கு ஸ்வாதந்திரியம் ஸர்வகர்த்ருத்வம் முதலான யுக்திகளிருக்கின்றன. ஸ்ரீ கிருஷ்ணர் ப்ரகிருதியாலுண்டான சரீரமும், குணங்களுமில்லாதவரென்பதற்கு அனேக சுருதிகள் ஸ்மிருதிகள் இதிஹாஸங்கள் புராணங்கள் இவைகளின் வாக்யங்களிருக்கின்றன. அவர் லோகவிலக்ஷணராய் இருத்தலை கீதையிலும் கூட அவர் சொல்லிக்கொண்டிருக்கிறர்.

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्वतः ।
........................मामेति सोऽर्जुन ॥

ஜன்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத: ।
........................மாமேதி ஸோர்ஜுன ॥

(அத்-4, சுலோ-9)

"என்னுடைய ஜன்மங்களும் கர்மங்களும் லோகவிலக்ஷணமான வைகளென்று அறிகிறவனே முக்தனாகிறான்."

अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥

அவ்ஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் ।
பரம் பாவமஜானந்தோ மம பூதமஹேச்வரம் ॥
(அத்-9. சுலோ-11)

"மூடர்கள் என்னை மனுஷ்யசரீரம்போலுள்ள லௌகிக சரீரம் உள்ளவனென்று அறிந்து என்னை அவமானம் செய்கின்றனர்" (எல்லோரைப்போல் என்னை ஓர் சாமானிய புருஷனென்று அறிகின்றனரென்று பொருள்.) அவர் அனாதிநித்யமானதும் பூர்ணமான குணம் நிறைந்ததும் ஸர்வோத்தமமானதுமான என் ஸ்வரூபத்தை அறிந்தவராவதில்லை." இப்பேர்ப்பட்ட திவ்யமான ரூபத்தைத் தான் பதினொன்றாவது அத்தியாயத்தில் அர்ஜுனன் கண்டிருக்கிறார்.

7, अनादित्वान्निर्गुणत्वात् परमात्मायमव्ययः ।

அனாதித்வாந் நிர்குணத்வாத் பரமாத்மாயமவ்யய: ॥
(அத்-13. சிலோ-31)

"ஹே கௌந்தேய ! உற்பத்தியில்லாதிருப்பதாலும் (நாசத்திற்குக் காரணமாயுள்ள) ப்ராகிருதமான குணங்களில்லாமல் இருப்பதாலும் பரமாத்மா (நான்) அவ்யயன் (சதுர்வித நாசமில்லாதவன்"

8. (1) सत्वं रजस्तमइतिगुणाःप्रकृतिसंभवाः ।
निबध्नन्ति महाबाहोदेहे देहिनमव्ययम् ॥

ஸத்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதி ஸம்பவா: ।
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹினமவ்யயம் ॥
(அத்-14. சுலோ-5)

"ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்கள் ப்ரகிருதியாலுண்டானவை. இவைகள் சொரூபத்தாலேயே அவ்யயனான சரீரியை (என்னால் பிராகிருதமான சரீரமுள்ள ஜீவனை) தேஹத்தில் கட்டுப்படுத்துகின்றன."

(2) पुरुषः प्रकृतिस्थो हि भुंक्ते प्रकृतिजान्गुणान् ।
कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥

புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜான் குணான் ।
காரணம் குணஸங்கோஸ்ய ஸதஸத்யோனி ஜன்மஸு ॥

(அத்-13. சுலோ 21)

"ஜீவன் ப்ரகிருதியாலுண்டான சரீரத்தில் ப்ரகிருதியான சுகதுக்காதிகளை அனுபவிக்கிறான். இந்த ஜீவனுக்கு (தேவர்கள் ரிஷிகள் முதலான) உத்தம ஜன்மங்களோ அல்லது (ராக்ஷஸம், பிசாசம், நாய், ஆடு, கோழி முதலான (தாழ்ந்த ஜன்மங்களோ)வந்து சேர குணங்களின் சங்கம்தான் காரணம்."

ஸ்ரீ கிருஷ்ணரின் உபாஸனையின் ப்ரபாவத்தால் குணங்களின் சங்கம் விலகினால் ஜீவன் முக்தனாகிறானென்று பகவான் அறிவிக்கிறார்.

(3) गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥

குணானேதாநதீத்ய த்ரீன் தேஹீ தேஹ ஸமுத்பவான் ।
ஜன்ம மிருத்யு ஜராதுக்கைர்விமுக்தோ அமிர்தமச்னுதே ॥

(அத்-14. சுலோ-20)

"சரீரியான ஜீவன் தேஹோத்பத்திக்குக் காரணமான த்ரிகுணங்களை மீறினால்தான் ஜனனம் மரணம் ஜரை முதலான துக்கரூபமான ஸம்ஸாரத்தால் முக்தனாகி பரபிரம்மத்தை அடைகிறான்." இவ்வாறு எல்லா ஜீவர்களும் குணங்களால் கட்டுப்பட்டவர்களென்றுசொல்லி பரமாத்மா (ஸ்ரீ கிருஷ்ணர்) மட்டில் குணங்களின் சம்பந்தமில்லாதவரென்று அவரே சொல்லியிருக்கிறார்.

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥

நான்யம் குணேப்ய: கர்தாரம் யதா த்ருஷ்டானு பச்யதி ।
குணேப்யஸ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோதிகச்சதி ॥

(அத்-14. சுலோ 19)

"ஜீவன் குணங்களைவிட வேறான பரிணாமகாரணங்களை எப்போது அறிவதில்லையோ குணங்களைவிட வேறான விலக்ஷணனும் ஸ்வதந்திரனுமான பரமாத்மாவை அறிகிறானோ" அப்போது அந்த ஜீவன் என்னை அடைகிறான் (முக்தனாகிறான்) என்று சொல்லியிருக்கிறார். இதனால் குணசம்பந்தமில்லாமலிருப்பது ஸ்ரீ கிருஷ்ணரொருவருக்கே தான் என்று சித்திக்கிறது. தவிரவும் எந்த பகவானைப் பஜிப்பவர்களுக்கு குணத்ரயங்கள் நிவிருத்தியாகின்றனவோ அந்த பரம புருஷன் சுயம் குணசம்பந்தமில்லாவதென்று சொல்லவேண்டியதேன். (சொல்வானேனென் என்று கூறுவதற்கு கைமுத்ய நியாய மென்றுபெயர்.)

9. मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
सगुणान्समतीत्यैतान् ब्रह्मभूयाय कल्पते ॥

மாம் ச யோவ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே 1
ஸகுணாந்ஸமதீத்யைதான் பிரம்மபூயாய கல்பதே 11

(அத்-14-சுலோ-26)

"யார் நிரந்தரமாய் பக்திபுடன் என்னை உபாஸிக்கிறாரோ அவர் இந்த குணத்ரயங்களால் விலகியவராய் முக்தனாக சக்தராகிறார்,"

Xvii, கர்மபந்தமில்லாமையும் நிர்குணத்வமென்ற தர்மம் எப்படியோ அப்படியேதான் ஸ்ரீ கிருஷ்ணரின் ஸர்வோத்தமத் தன்மைக்கு ஸாதனமானது என்று 'ओं संभोगप्राप्तिरिति चेन्नवैशेष्यात् ओं" (ஓம் ஸம்போகப்ராப்திரிதி சேந்நவைசேஷ்யாத் ஓம்) முதலான சூத்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. பிரம்மாதி ஸர்வஜீவர்களும் ஸத்கர்மங்களால் புண்யத்தையும் துஷ்கர்மங்களால் பாபத்தையும் அடைந்திருக்கின்றனர். ஸ்ரீ கிருஷ்ணர் ஸ்வதந்திரமாய் கர்மங்களுக்கும் அதிபதியாவார். அவருக்கு புண்ய பாபங்களின்ஸம்பந்தமில்லை. இதரர்கள்கர்மங்களுக்கு அதிகாரிகள்.

1. कर्मण्येवाधिकारस्ते माफलेषु कदाचन ।
मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥

கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன 1
மாகர்ம பலஹேதுர் பூர்மாதே ஸங்கோத்ஸவ கர்மணி 11

(அத்-2, சுலோக-47)

"ஹே அர்ஜுனனே! உனக்கும் உன்னைப்போன்ற ஞானிகளுக்கும் கர்மங்களைச் செய்வதில்தான் அதிகாரம். கர்மபலனை அபேக்ஷிப்பதில் உனக்கு அதிகாரமில்லை. (உனக்கு ஸ்வாதந்திரியமில்லாதிருப்பதால்) கர்மபலனையுத்தேசித்து நீ கர்மத்தைச்செய்யாதே கர்மத்தை பரித்யாகம் செய்வதில் உனக்கு இச்சை வேண்டாம்."

2. नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।

நியதம் குரு கர்மத்வம் கர்மஜ்யாயோ ஹ்யகர்மண: 1

(அத்-3. சுலோ-8)

" நீ விதியில் சொல்லப்பட்ட கர்மத்தைச் செய். கர்மத்தை விடுவதை விட கர்மத்தை ஆசரிப்பது மேலானது."

3. ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥

ஞாத்வா சாஸ்திர விதானோக்தம் கர்மகர்துமிஹார்ஹஸி 1

(அத்-16, சுலோ-24)

"சாஸ்திரவிதியை அறிந்து நீ சத்கர்மத்தைச் செய்வாய்."

4. यज्ञदानतपःकर्म नत्याज्यं कार्यमेव तत् ।
यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥

யக்ஞதானதப: கர்ம நத்யாஜ்யம் கார்யமேவதத் 1
யக்ஞோ தானம் தபஸ்சைவ பாவனானி மனீஷிணாம் 11

(அத்-18. சுலோ-5)

"யக்ஞம், தானம், தபஸ் ஆகிய ஸத்கர்மம் அவசியம் அனுஷ்டிக்கத் தக்கது. யக்ஞம் தானம் தபஸ் இவைகள் ஞானிகளையும் சுத்தப்படுத்துகிறவைகள்," இவ்வாறு அர்ஜுனன் முதலிய எல்லா ஞானிகளும் அக்ஞானிகளும் கர்மத்தைச் செய்யவேண்டும் என்று பகவான் கூறியிருக்கிறார்.

5. यदहंकारमाश्रित्य न योत्स्यइति मन्यसे ।
मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥
स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।
कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ॥

யதஹங்காரமாச்ரித்ய நியோத்ஸ்ய இதி மன்யஸே 1
மித்யைஷவ்யவஸாயஸ்தே ப்ரகிருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி 11

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்தஸ் ஸ்வேனகர்மணா I
கர்த்தும் நேச்சஸி யன்மோஹாத் கரிஷ்யஸ்வசோபிதத் II
(அத்-18. சுலோ-59-60)

"நீ ஸ்வதந்திரன்என்ற அபிமானத்தால்யுத்தம்செய்வதில்லை என்று அறிந்தால் அந்த நிச்சயம் வ்யர்த்தமே ஆகும். ஏனெனில் ப்ரகிருதி(ஈசுவரனுடைய இச்சை, சத்வாதி குணங்களின் நியாமகரான சேதனப்ரகிருதி) உன்னை பலாத்காரமாய் யுத்தகர்மாவில் ப்ரேரிக்கிறது. ஹே கௌந்தேய ! முன் சம்பாதித்ததாயுள்ள கர்மமாகிய பந்தத்தால் கூடிய நீ யுத்தகர்மாவை செய்வதில்லை என்று பந்துக்களிடம் கொண்டமோஹத்தால் இச்சிப்பினும் பலாத்காரமாய்அவசனாகி (என்றால் ஈசுவரனுக்கு அதீனமாய்) அந்த கர்மத்தைச்செய்பவனாய் ஆகிறாய்" இதனால் ஸர்வசேதனர்கள் கர்மபந்தத்தால் கட்டுப்பட்டவராகி ஸ்வதந்திரனான பரமாத்மாவின் நியமனத்திற்கு அதீனமாகின்றனரென்று நிச்சயமாகிறது. இவ்வாறு பரமாத்மாவால் அவசியம் செய்யபடவேண்டிய கர்மமில்லை. அவர் ஸ்வதந்திரன், அவர் செய்யும் ஜகத்சிருஷ்டி முதலிய காரியங்கள் அவ்வால் சுபாவமாகவே செய்யப்படுகின்றன. ஆகையால் அவர் கர்மபந்தத்தில் சிக்குவதில்லை.

6. न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किंचन ।
नानवाप्तमवाप्तव्यं......................॥

நமே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சனI
நாநவாப்தமவாப்தவ்யம்................ (அத்-3. சுலோ-22)

"அர்ஜுனா! நீ பிறர் நிர்பந்தத்திற்கு உட்பட்டு எந்தப்ரயோஜனத்தையும் கருதி செய்யவேண்டிய எந்த கர்மமும் மூன்று உலகத்திலும் இல்லை. ஏனெனில் நான் அடையாமலுள்ள ப்ரயோஜனங்கள் யாதொன்றுமே இல்லை. (நான் பூர்ணலாபன் என்று தாத்பர்யம்)" இவ்வாறு தனக்கு கர்மபந்தமில்லாதிருப்பதற்கு தான் பூர்ணசுகனாயிருப்பதே ஓர் காரணமென்று காட்ட யுக்தியையும் கூறியிருக்கிறார்.

வேறொரு யுக்தியாலும் பகவானுக்கு கர்மபந்தமில்லைஎன்பது நிச்சயமாகிறது.

7. ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवाः ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभिः ॥

யே மே மதமிதம் நித்யமனுதிஷ்டந்தி மானவா: ।
சிரத்தாவந்தோ அனஸூயந்தோ முச்சயந்தேதேபிகர்மபி: ॥
(அத்-3. சுலோ-31)

"எல்லா ஸத்கர்மங்களையும் அனுஷ்டித்து என்னிடமே ஸமர்பிக்வேண்டுமென்ற என் அபிப்பிராயத்தை யார் எப்போதும் அனுஷ்டிக்கின்றனரோ அவர்கள் (ஞானமார்க்கமாய்) கர்மங்களால் முக்தராவார்கள்'' அவரிடம் கர்மங்களை ஒப்புக்கொடுப்பவர்களும்கூட முக்தர்களாகின்றனரென்றால் கர்மபந்தத்தை பரிஹரிக்கும் பரம புருஷன் சுயம் கர்மபந்தத்தில் மாட்டிக்கொள்ளமாட்டாரென்று நாம் சொல்லவும் வேண்டுமோ ?

8. न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।
इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥

நமாம் கர்மாணி லிபந்தி ந மே கர்மபலே ஸ்பிருஹா ।
இதிமாம் யோபிஜாநாதி கர்மபிர்ந ஸபத்யதே ॥
(அத்-4. சுலோ-14)

"கர்மங்கள் என்னை கட்டுப்படுத்துகிறவைகளாய் ஆகாது. (நான் செய்யும் ஜகத்சிருஷ்டி ஜகத்ஸம்ஹாரம் முதலான கர்மங்களால் புண்யபாபங்கள் ஏற்பட்டு எனக்கு சுகதுக்கங்கள் சம்பவிக்காது என்று தாத்பர்யம்) நான் கர்மபலனில் அபேக்ஷையன்றியும் ஸ்வதந்திரனும் பூர்ணனந்தனும் இருக்கிறேன். இவ்வாறு (நான் கர்மபந்தமில்லாதவனென்று) அறிந்தவனும்(ஞானத்தை அடைந்து) கர்மங்களால் முக்தனாகிறான்."

9. न च मां तानि कर्माणि निबध्नन्ति धनंजय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥

ந சமமாம் தானிகர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ।
உதாஸீனவதாஸீன மஸக்தம் தேஷு கர்மஸு ॥
(அத்-9. சுலோ-9)

"ஹே தனஞ்ஜய ! நான் செய்யும் ஜகத்சிருஷ்டியாதி கர்மங்கள் என்னை பந்தப்படுத்துவதில்லை. ஏனெனில் அந்த கர்மங்களில் எந்த பலனைக்கருதாமலும், ஆஸக்தியன்றியும், உண்மையாய் நான்உதாஸீனனுப் இல்லாமலிருந்த போதிலும் உதாஸீனன்போல் காட்டிக் கொடுத்தும் இருக்கிறேன்."

Xviii ஸர்வசத்கர்மங்களின் பலனைப் புஜிக்கும் தன்மை-பரபிரம்மத்தின் அசாதாரணமான தன்மை என்று வேதத்திலும் " ओं गुहां प्रविष्टावात्मानौ हि तद्दर्शनात् ओं " (ஓம் குஹாம் ப்ரவிஷ்டாவாத்மானௌ ஹி தத்தர்சனுத் ஓம்) முதலான பிரம்மசூத்திரங்களிலேயும் நிர்ணயிக்கப்பட்டதாயிருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ணர் அந்த லக்ஷணம் தம்மிடம் உண்டென்று கூறியிருக்கிறுர்.

1. मयि सर्वाणि कर्माणि सन्न्यस्याध्यात्मचेतसा ।
निराशीर्निर्ममो भूत्वा युद्धयस्व विगतज्वरः ॥

மயிஸர்வாணி கர்மாணி ஸந்யஸ்யாத்யாத்மசேதஸா ।
நிராசீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ॥

(அத்-3. சுலோ-30)

"வித்யுக்தமான எல்லா கர்மங்களையும் என்னிடம் ஸமர்ப்பித்து நானே ஸர்வோத்தமனென்று அறிந்து பயமற்று யுத்தம் செய்."

2. यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यासि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥

யத்கரோஷி யதச்னஸி யஜ்ஜுஹோஷி ததாஸியத் ।
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்பணம் ॥

(அத்-9. சுலோ-27)

"எல்லா கர்மங்களையும் என்னிடம் ஸமர்ப்பணம் செய்வாய்" என்ற மேற்கண்ட விதிவாக்யங்களின் பலத்தால் ஸ்ரீ கிருஷ்ணர் எல்லா கர்மபலன்களையும் ஏற்றுக்கொள்பவரென நிச்சயமாகிறதுமன்றி வாய்விட்டும் பகவான் கூறியிருக்கிறுர்.

3. भोक्तारं यज्ञतपसां......ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥

போக்தாரம் யக்ஞதபஸாம்......... க்ஞாத்வா ।
ம் சாந்திமிருச்சதி ॥ (அத்-5. சுலோ-29)

"அதிகாரியாயுள்ளவன் ஜ்யோதிஷ்டோமாதி யாகங்களுடையவும் கிருச்ர சாந்த்ராயணாதி தபஸ்ஸுகளுடையவும் பலபோக்தாவான என்னுடைய (ஸ்ரீ கிருஷ்ணருடைய) உபாஸனை செய்து முக்தியை அடைகிருன்."

4. अधियज्ञोऽहमेवात्रदेहे

அதியக்ஞோ ஹமேவாத்ர தேஹே ll (அத்-8, சுலோ-4)

"எல்லா ஜீவர்களின் சரீரத்திலிருந்து யக்ஞத்தை பிரவர்த்திப்பவனாகி யக்ஞபலனை புஜிக்கிறவனாய் இருப்பவனும் நானே-"

5, अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।

அஹம் ஹி ஸர்வயக்ஞாம் போக்தாசப்ரபுரேவச l

(அத்-9, சுலோ-24)

"திரவியயக்ஞம், தபோயக்ஞம், யோகயக்ஞம், ஆகிய எல்லா யக்ஞங்களின் பலபோக்தாவும்யக்ஞங்களைபிரவர்த்திப்பவனும்நானே" இப்பேர்ப்பட்டதாயுள்ள கர்மபலபோகத்தால் பரமாத்மாவுக்கு எவ்வகையான ஆனந்தமதிகமென்பது கிடையாது. அவரோ பூர்ணனந்தர்.

Xix எங்கும் ஸமராயிருத்தல் என்ற தன்மை பரப்பிரம்மனுக்கு மாத்திரம் உள்ளதென்று "ओं न स्थानतोऽपि परस्योभयलिंगं सर्वत्र हि ओं" (ஓம் ந ஸ்தானதோபி பரஸ்யோபய லிங்கம் ஸர்த்ர ஹி ஓம்) முதலான சூத்ரங்களில் சூத்திரகாரர் நிர்ணயித்திருக்கிருர். ஸ்ரீ கிருஷ்ணர் தம்மிடம் இந்த அசாதாரணமான தர்மம் இருப்பதாய் நிரூபித்திருக்கிருர்.

1. विद्याविनयसम्पन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।
शुनि चैव श्वपाके च पण्डितास्समदर्शिनः ॥
निर्दोषं हि समं ब्रह्म ॥

வித்யாவினய ஸம்பன்னே ப்ராம்மணே கவிஹஸ்தினி l
சுனிசைவ ச்வபாகே ச பண்டிதாஸ்ஸமதர்சன: ll
நிர்தோஷம் ஹி ஸமம் பிரம்ஹ .....(அத்-5, சுலோ-18, 19)

"பண்டிதர்கள் வித்தைவினயம் இவைகூடிய பிராம்மணனிடமும் கோவிடமும் யானையிடமும் நாயினிடத்திலும் சண்டாளனிடமும்

இவை போன்ற விஷமமான ஸ்தானங்களிடமும் உள்ள பரமாத்மா (ஸ்ரீ கிருஷ்ணன்) நிர்தோஷமாயிருக்கும் விஷயத்தில் தாரதம்யமில்லாதவர் (என்றால்) இந்த விஷமமான அதிஷ்டானங்களிலிருக்கும் பரமாத்மாவுக்கு ஸ்தானபேதங்களின் நிமித்தம் குணங்களின் பேதமிருப்பதில்லை. அவர் எல்லாவிடங்களிலும் நிர்தோஷராகவே இருப்பவர் என்று அறிகின்றனர்."

2. समबुद्धिर्विशिष्यते ॥

ஸமபுத்திர் விசிஷ்யதே ॥ (அத்-6. சுலோ-9)

"ஸூஹ்ருத்முதலான அனேகஅதிஷ்டானங்களில்அந்தர்யாமியாயிருக்கும் பரமாத்மா (ஸ்ரீகிருஷ்ணர்) கொஞ்சமேனும்பேதமின்றி ஆனந்தபரிபூர்ணராகவே இருப்பவரென்று அறிபவன் ஞானி ஆவான்."

3. सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थितः ।
...............स योगी मयि वर्तते ॥

ஸர்வபூதஸ்திதம் யோமாம் பஜத்யேகத்வமாஸ்தித: ।
........... ஸ யோகீ மயி வர்த்தேத ॥ (அத்-6. சுலோ-31)

"ஸர்வப்ராணிகளிடமும் இருக்கும் என்னை எப்படியும் (ஞானம் ஆனந்தம் குணம் கிரியை முதலியவைகளில்) பேதமற்றவராயிருப்பதாய் த்யானம் செய்யும் யோகி என்னுடைய பக்தனாவான்."

4. ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ।

ஈக்ஷதே யோக யுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சன: ॥

(அத்-6. சுலோ-29)

"த்யானமாகிய மோக்ஷோபாயத்தில் ஈடுபட்டவன் பிரம்மாமுதற்கொண்டுதிருணஜீவர்கள்வரையிலுள்ள ஜீவர்களிடமுள்ள பகவான் (ஸ்ரீகிருஷ்ணர்) ஐசுவரியம் முதலான குணங்களால் சமர் என்று அறிகிறான்."

5. अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितं ।

அவிபக்தம் ச பூதேஷு விபக்தமிவ ச ஸ்திதம் ॥
(அத்-13. சுலோ-17)

"பரப்ரம்மம் (ஸ்ரீ கிருஷ்ணர்) நாநாவிதமான ப்ராணிகளிடம்அபின்னாாகவே இருந்து அக்ஞானிகளுக்கு மட்டும் பேதமுள்ளவராய் காணப்படுகிறார்."

6. समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।
विनश्यस्त्वविनश्यन्तं यः पश्यति सपश्यति ॥

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேசுவரம் ।
விநச்யத்ஸ்வவிநச்யந்தம் ய:பச்யதி ஸ பச்யதி ॥

(அத்-13. சுலோ-28)

"ஏற்றத்தாழ்வுள்ளவைகளான பிரம்மாமுதற்கொண்டுதிருணஜீவர்கள் வரையிலுள்ள நானுவகை பிராணிகளிடம் நிலைநின்றுவரும் அசிந்த்யமான சக்தியுள்ள ஸ்ரீ பரமாத்மாவை (என்னை) எப்படியும் பேதமற்றவனென்றும் (ஏற்றத்தாழ்வில்லாதவன் எங்கும் நிர்தோஷனாய் குணபூர்ணனாயிருப்பவன்) ஜனனம் மரணம் முதலான பலவகை துக்கமுள்ள பிராணிகளிடமிருப்பினும் துக்காதிதோஷம் அற்றவனென்றும் அறிபவன் ஞானியாவான்."

7. समं पश्यन्हि सर्वत्र समवास्थितमीश्वरम् ।
न हिनस्त्यात्मनाऽत्मानं ततो याति परांगातिम् ॥

ஸமம் பச்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்திதமீசுவரம் ।
ந ஹினஸ்த்யாத்மனாத்மானம் ததோயாதி பராம்கதிம் ॥

(அத்-13. சுலோ-29)

"பிரம்மா முதற்கொண்டு திருணம் வரையிலுள்ள எல்லா பிராணிகளிடம் நிர்தோஷனாயும் ஞானத்தால் பூர்ணனாயும் நிலைநின்றிருக்கும் பரமாத்மாவை (ஸ்ரீ கிருஷ்ணனை) ஸமமென்று (தாரதம்யம் இல்லாதவனென்றும் எப்பவும் அபின்னனென்றும்) அறிபவன் தன்னை நரகாதி அனர்த்தங்களுக்கு உட்படுத்திக்கொள்வதில்லை தவிரவும் முக்தியையே அடைகிறான்."

8. यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।
.........ब्रह्म संपद्यते तदा ।

யதா பூத பிரதக் பாவ மேகஸ்தமனுபச்யதி ।
............பிரம்ம ஸம்பத்யதே ததா ॥ (அத்-13. சுலோ-31)

"தேவர்கள் தானவர்கள்முதலான ரூபத்தால் பலவகையாய் பேதமடைந்த பிராணிகள் எல்லாவிடத்திலும் பேதமற்றிருக்கும் ஒரே பரமாத்மாவிடத்தில் (ஸ்ரீகிருஷ்ணனிடத்தில்) ஆசிரதமாயிருக்கின்றனவென்று அறிந்தானுகில் அப்பொழுது அதிகாரியாயிருப்பவன் பரபிரம்மத்தையடைவான்.

Xx தனித்தனியாயுள்ள எல்லா இந்திரியங்களின் கார்யகாரியாயுள்ள விலக்ஷணமான தேகேந்திரியாதிகளைப் படைத்திருப்பது பிரம்மாதிகளிடம் வியாப்தமாயில்லாமல் பரபிரம்மத்திடம்மட்டில் உள்ள தர்மம். பகவானுடைய எந்த ஓர் இந்திரியமும் எல்லா இந்திரியங்களின் காரியத்தையும் செய்வதில் ஸாமர்த்தியம்பெற்றதென்று அர்த்தம். இந்த விஷயம் ஸ்ரீகிருஷ்ணரிடம் காணப்பட்டிருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணர் சொல்வதாவது

1. **ममात्मा भूतभावनः ।**

*மமாத்மாபூதபாவந:* 1 (அத்-9, சுலோ-5)

'என் சரீரம் பிராணிகளை சிருஷ்டிசெய்வதில் சாமர்த்யம்பெற்றது.'

2. **अनेक बाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ॥**

*அநேக பாஹூதரவக்த்ரநேத்ரம் பச்யாமித்வாம் ஸர்வதோநந்தரூபம்* 1 (அத்-11, சுலோ-16)

இது அர்ஜுனன் செய்த ஸ்தோத்திரம். "அநந்தமான கைகள், வயிறுகள், முகங்கள் அப்படியே கண்கள் இவைகளுள்ளதும் ஒவ்வொரு ரூபத்திலும் அனந்தனமான ரூபங்களுள்ளதுமான அனந்தரூபங்களைக்கொண்ட உன்னைக் காண்கிறேன்."

3. **सर्वतः पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।**
**सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥**

*ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோக்ஷி சிரோமுகம்* 1
*ஸர்வத: சுருதிமல்லோகே ஸர்வமாவிருத்யதிஷ்டதி* 11

(அத்-13, சுலோ-18)

"பரபிரம்மம் (ஸ்ரீகிருஷ்ணர்) எல்லா அவயவங்களிலும் கைகால்களின் சக்தியைக்கொண்டவர். எல்லா அவயவங்களாலும் கண் தலை வாய் இவைகள் செய்யும் காரியங்களைச்செய்பவர். எல்லா அவயவங்களிலும் ச்ரோத்திரியந்திரியத்தின் சக்தியைக்கொண்டவர் எல்லாவற்றையும் வியாபித்துக்கொண்டிருப்பவர்."

Xxi மோக்ஷத்திற்கு காரணமாயுள்ள அந்தியகாலத்திய ஸ்மரணைக்கு விஷயமாயிருத்தல் பரபிரம்மனுக்குத்தான் உண்டு என்று வேதாந்தஸூத்திரத்தில் அதிருச்யத்வாதிகரணத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. மரணகாலத்தில் யாருடைய ஸ்மரணையைச் செய்தால் புனராவிருத்தியில்லாத மோக்ஷம் கிடைக்குமோ அவர் தான் ஸர்வோத்தமன். அவர் யாரென்றால் ஸ்ரீகிருஷ்ணர் தாம் தானென்று சொல்லிக்கொள்கிறார்.

1. एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वाऽस्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥

ஏஷா ப்ராம்ஹீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாஸ்யாமந்தகாலேபி பிரம்மநிர்வாணமிருச்சதி ॥

(அத்-2, சுலோ-72)

"மேலே சொன்னபடி எல்லா காமங்களையும் ஒழித்தவனாய் பகவானின் உபாஸனையை செய்வது பிரம்மஞானியின் லக்ஷணரூபமான ஸ்திதியாகும், இந்த நிலைமையை அடைந்தவன் ஸம்ஸாரதாபத்தை அடைவதில்லை. தேகத்தை விடும்போது அந்தியகாலத்தில் இப்பேர்ப்பட்டதாயுள்ள பகவத்ஸ்மரணைரூபமாகிய ஸ்திதியிலிருந்தானேயானால் ப்ராகிருதசரீரமற்ற பிரம்மத்தை (என்னையே) அடைவான்."

2. साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥

ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியக்ஞம் ச யே விது: ।
ப்ரயாணகாலேபி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ: ॥

(அத்-7, சுலோ-30)

"விநாசமடையும் எல்லா தன்மைகளிலும் அந்தர்யாமியாகியும் ஹிரண்யகர்பர் முதலான எல்லா தேவர்களிலும் அந்தர்யாமியாகியும் எல்லா யக்ஞத்தை ப்ரவிருத்திப்பவனும் எல்லாயக்ஞத்தின் பலபோக்தாவுமான என்னை தெரிந்துகொண்டு, சரீரத்தை விடுவதாயுள்ள மரணகாலத்தில் யார் என்னை த்யானம் செய்வார்களோ அவர்கள்தான் ஸமாதியடைந்த மனமுடையவர்களாவார்கள்."

3. अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यःप्रयाति च मद्भावं याति नास्त्यत्र संशयः ॥

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன்முக்த்வா கலேவரம் ।
ய: ப்ரயாதி ச மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சய: ॥

(அத்-8, சுலோ-5)

"மரணகாலத்தில் என்னைத்தான் ஸ்மரிப்பவனாய் சரீரத்தை விட்டு விலக்கி யார் புறப்படுகிறாரோ அவர் என்னிடம் (துக்கமில்லாத ஆனந்தானுபவமாகிய) நிலையை அடைகிறார். (அதாவது முக்தனாகிறாரென்று அர்த்தம்.) இதில் சந்தேகமில்லை."

4. ओमित्येकाक्षरं ब्रह्मव्याहरन्मामनुस्मरन् ।
यःप्रयातित्यजन्देहं स याति परमां गतिम् ॥

ஓமித்யேகாக்ஷரம் ப்ரம்மவ்யாஹரன்மாமனுஸ்மரன் ।
ய: ப்ரயாதித்யஜன்தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥

(அத்-8, சுலோ-13)

"ப்ரணவத்தை வாயால் உச்சரித்துக்கொண்டு மனதால் என்னைத் தியானம் செய்துகொண்டு எவனொருவன் தேகத்யாகம் செய்வானோ அவன் முக்தனாகிறான்."

யாருடைய ஸ்மரணையால் முக்தியுண்டாகிறதோ அவர்தான் பரபிரம்மம் அதாவது ஸர்வோத்தமவஸ்துவாய் இருக்கவேண்டும் என்று மேற்கண்ட வசனங்களின் கருத்து.

Xxii பரமாக்ஷரத்வம் (அதாவது அக்ஷரசப்தத்தால் சொல்லப்படும் தன்மை) பரபிரம்மமாகிய விஷ்ணுவிடம்மட்டில் இருக்கக் கூடியதென்று ओं अक्षरमम्बरान्तधृतेः ओं (ஓம் அக்ஷராமம்பராந்த திருதே:ஓம்) முதலான வேதாந்தஸூத்திரங்களில் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணர் தாம்தான் முக்யமாய் அக்ஷரசப்தத்தால் சொல்லப்படுகிறவரென்று சொல்லிக்கொண்டிருப்பதால் இதனாலேயும் அவர் ஸர்வோத்தமரென சித்தமாகிறது. அக்ஷரனென்றால் நாசமற்றவனென்று பொருள், அநித்யமாயிருத்தல், தேகநாசம், துக்கப்ராப்தி, அபூர்ணமாயிருத்தல் என்று நால்வகை நாசம் சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. அச்யுதனான விஷ்ணுவிடம் இந்த நால்வகை தோஷங்களும் இல்லையாதலால் அவர்

அக்ஷரனெனப்படுகிறார். नत्वेवाहं जातुनासं (நத்வேவாஹம் ஜாது நாஸம்) முதலான சுலோகங்களால் ஸ்ரீகிருஷ்ணர் தாமும் எல்லா ஜீவர்களும் நித்யர்களென சொல்லியிருக்கிறார். देहिनो देहांतरप्राप्तिः (தேஹினோ தேஹாந்தரப்ராப்தி:) ஜீவனுக்குத்தான் சரீர நாசரூபமாகிய நாசம் உண்டேயல்லாது தனக்கு இல்லையென்று ஸூசனை செய்திருக்கிறார்.

यः सर्वेषु भूतेषु न नश्यत्सु विनश्यति ।

ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விச்யதி 1

(அத்-8, சுலோ-20)

என்னும் சுலோகத்தில் எல்லாப்ராணிகளும் மகாப்ரளயத்தில் சரீர நாசத்தைஅடைந்தபோதிலும் தமக்கு நாசமில்லை என்று ஸ்பஷ்டமாய்ச் சொல்லியிருக்கிறார். नानवाप्तमवाप्तव्यं (நானவப்தமவாப்தவ்யம்) முதலான சுலோகங்களால் பகவான் தமக்கு துக்கத்திற்குக் காரணமே இல்லையென்று அறிவித்திருக்கிறார். मत्तः परतरं नान्यत्किंचदस्ति धनंजय (மத்த: பரதரம் நான்யத்கிஞ்சிதஸ்திதனஞ்ஜய)முதலான சுலோகங்களால் தம்மைவிட உத்தமரில்லை என்றும் ஆகலால் தாம்தான் நிரவதிகரென்றும் சொல்லியிருக்கிறார். ஆகையால் சரீரநாசமாகிய நாசமுள்ள ஜீவர்கள் அக்ஷரமெனப்படமாட்டார்கள். மஹாலக்ஷ்மி அவருக்கு யோக்யமான பூர்ணஞானந்தானுபவமுள்ளவளாய் அக்ஷரை எனப்படுகிறாள்தான். பகவானும்கூட பதினைந்தாவது அத்தியாயத்தில் कूटस्थोऽक्षर उच्यते (கூடஸ்தோ அக்ஷர உச்யதே) என்று லக்ஷ்மீதேவிக்கும் அக்ஷரமென்னும் சப்தத்தால் சொல்லப்படும் தன்மைஉண்டென்று சொல்லியிருக்கிறார். ஆயினும் லக்ஷ்மீதேவி அஸ்வதந்திரையானதால் பரமாத்மாவின் அனுக்கிரஹத்தால்தான் அவள் அக்ஷரை எனப்படுகிறாள். பரமாத்மாவோ இதரரின் அபேக்ஷையன்னியில் அக்ஷரனெனப்படுகிறார். எட்டாவது அத்தியாயத்தில் अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् । यं प्राप्य न निवर्तन्ते तद्धामपरमं मम ॥ (அவ்யக்தோ அக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் கதிம் 1 யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம ||) என்னும் சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் புனராவிருத்தியில்லாத மோக்ஷத்தைக் கொடுக்கும் நான்

அக்ஷரனெனப்படுகிறேனென்று சொல்லியிருப்பதால் முக்யமாய் அக்ஷரசப்தத்தால் சொல்லப்படும் தன்மை மோக்ஷந்தருபவரான ஸ்ரீகிருஷ்ணருக்கே தகும்.

சாஸ்திரத்தில் சில இடங்களில் முக்தர்களையும் மஹாலக்ஷ்மியையும் அக்ஷரர்களென்று சொல்லி அவர்களைவிட உத்தமரான பரமாத்மாவை பரமாக்ஷரரென்று காட்டப்பட்டிருக்கிறது, ஆகவே பரமாக்ஷரத்தின் தன்மை லக்ஷ்மி முதலான எந்த சேதனனுக்கும் எந்த காலத்திலும் ஏற்படமாட்டாது.

**1. अक्षरं ब्रह्मपरमम् ॥**

அக்ஷரம் பிரம்மபரமம் ।                (அத்-8, சுலோ-3)

பிரம்மம் யாரென்று கேட்டதற்கு இது உத்தரம். "பரமாக்ஷரன் பிரம்மம் (ஸ்ரீகிருஷ்ணர்)" இது ஸ்பஷ்டமான பதில்.

**2. यदक्षरं वेदविदो वदन्ति......तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये ॥**

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி ........... தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே ॥                (அத்-8, சுலோ-11)

"வேதவித்துகள் எந்த பரபிரம்மத்தை (என்னை) அக்ஷரனென்று அழைப்பார்களோ ........... அப்பேர்ப்பட்டவனின் சொரூபத்தை உனக்குச் சொல்லுகிறேன்."

**3. अव्यक्तोऽक्षरइत्युक्तस्तमाहुः परमां गतित् ।**
**यं प्राप्य न निवर्तन्ते तद्धामपरमं मम ॥**

அவ்யக்தோ அக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம் கதிம் ।
யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத்தாம பரமம் மம ॥
(அத்-8, சுலோ-31)

"அவ்யக்தரெனப் பெயர்கொண்ட பகவான் அக்ஷரனெனப்படுகிறார். அவரே முக்யமாய் அடையக்கூடியவர். யாருடைய பிராப்தியானபின் புனராவிருத்திரூபமாகிய ஸம்ஸாரம் வாராதோ அது என்னுடைய ஸ்வரூபமே." அர்ஜுனன் அவ்வாறே பார்த்திருக்கிறார்.

**4. त्वमक्षरं परमं वेदितव्यम् ।**

த்வமக்ஷரம் பரமம் வேதிதவ்யம் ।                (அத்-11, சுலோ-18)

"நீ பரமாக்ஷரனெனத் தெரிந்துகொள்ளப்படத் தகுந்தவன்."

5. अनन्त देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥
அநந்ததேவேச ஜகந்நிவாஸ த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம் யத் ll
(அத்-11, சுலோ-37)

"ஹே அநந்தா! தேவோத்தமா! ஜகந்நிவாஸா! நீதான் அக்ஷரன். கார்யகாரணரூபமாகிய ஸமஸ்த பிரபஞ்சத்திற்கும் விலக்ஷணன் நீதான்."

Xxiii அவ்யக்தத்தன்மை ஸர்வோத்தம வஸ்துவாகிய பரபிரம்மத்தின் குணமென்று ओं सूक्ष्मंतुतदर्हत्वात् ओं (ஓம் ஸூக்ஷ்மம்து ததர்ஹத்வாத் ஓம்) ओं तदव्यक्तमाह हि ओं (ஓம் ததவ்யக்தமாஹஹி ஓம்) முதலான பிரம்மஸூத்திரங்களில் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணர் தாமே அவ்யக்தரென்று சொல்லியிருப்பதால் அவரே ஸர்வோத்தமரென்று சித்திக்கிறது.

விஞ 8:— ஸ்வாமிகளே! அவ்யக்தனென்றால் வ்யக்தனன்று, ஞானத்திற்கு விஷயனன்று அதாவது அக்ஞேயனென்று அர்த்தம். பரபிரம்மம் அக்ஞேயனென்றுதானே அத்வைதிகள் கூறுகின்றனர். அப்படியிருக்க அவர்களுடைய மதத்திற்கும் தங்களுடைய மதத்திற்கும் வித்யாஸமென்ன?

விடை:— அர்ஜுனனுடைய ஞானத்திற்கு விஷயனாகி பீஷ்மாதிகளால் துதிக்கப்பெற்றவனாய் யுத்தகளத்தில் நின்றிருந்த ஸ்ரீ கிருஷ்ணர் தாம் அக்ஞேயன் என்று சொல்லிக்கொண்டால் 'நான் மலடியின் மகன்' என்று சொல்பவன்போல் ஒன்றுக்கொன்று ஒவ்வாததான வார்த்தையாடுகிறவன்போலாவான். ஸர்வக்ஞசிகாமணியான ஸ்ரீ கோபாலகிருஷ்ணபரமாத்மாவின் மொழிகள் பித்தனின் பிதற்றலல்ல. ஆகையால் அவருடைய மொழிகளுக்கு பிரமாணவிரோதம் வாராதபடிக்கு ஸந்தர்ப்பத்திற்குத் தகுந்ததாயுள்ள அர்த்தம் செய்யவேண்டும். அவ்யக்தமென்னும் சப்தத்தின் அர்த்தம் மூன்று வகையாய் சாஸ்திரத்தில் நிர்ணயமாகியிருக்கிறது. (1) பரமாத்மா சப்தாதிவிஷயங்கள்போல் பஞ்சஞானேந்திரியங்களால் அறியப்படாமலிருப்பதால் அவ்யக்தனெனப்படுகிறார், ஆகையால்தான் அவருக்கு அதோக்ஷஜனென்று பெயர். (2) दृश्यते त्वग्र्यया बुद्ध्या (த்ருச்யதேத்வக்ரயா புத்யா)

முதலான சுருதிப்படிக்கு திவ்யதிருஷ்டிக்கு (என்னால் சிரவணம் முதலியவைகளால் ஸம்ஸ்காரமடைந்த மனஸ்ஸுக்கு) பரமாத்மா வ்யக்தனாகிறான். ஆனால் திவ்யதிருஷ்டியால்மட்டில் அவரைப் பார்ப்பது அஸாத்தியம். அவரே தம்முடைய ப்ரஸாதத்தால் வியக்தரானால் அவரை திவ்யதிருஷ்டியால் பார்க்கலாம். அதிகாரிகள் செய்யும் பக்தியால் உண்டான அவருடைய ப்ரஸாதத்தாலேயே வியக்தமாகும் ஸ்வபாவத்தை அவர் கொண்டிருப்பதால் அவர் அவ்யக்தரெனப்படுகிறார். (3) மேலும் பரமாத்மா ப்ரஸன்னமானாலும் அவரை சம்பூர்ணமாய் அறியமுடிவதில்லை. அவருடைய ஏகதேசம் தான் லக்ஷ்மீ பிரம்மாமுதல் திருணஜீவர்கள்வரையிலுள்ள சேதனர்களின் ஞானத்திற்கு விஷயமாக இருக்கிறது. நிரவதிகமாய் பரிபூர்ணமாயுள்ள அவ்ருடைய வைபவம் சம்பூர்ணமாய் யாருக்கும் வ்யக்தமாவதில்லை என்னும் காரணத்தாலும் அவர் அவ்யக்தரெனப்படுகிறார். இந்த மூவகையான அவ்யக்தத்தன்மை ஸ்ரீ கிருஷ்ணருக்கு ஸம்பூர்ணமாயிருக்கிறதென்று அவருடைய வாக்யத்தாலேயே சித்திக்கிறது.

1. मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
न च मत्स्थानि भूतानि पश्यमे योगमैश्वरम् ॥

மயாததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்த மூர்த்திநா l
ந ச மத்ஸ்தானி பூதானி பச்யமே யோகமைச்வரம் ll

(அத்-9, சுலோ-4—5)

"ஸ்தாவரஜங்கமாத்மகமான இந்த எல்லா பிரபஞ்சமும் ஸூக்ஷ்ம ரூபியான என்னால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. [அப்படியானல் கடம் முதலான பதார்த்தங்கள்போல் அவர் ஏன் இந்திரியங்களுக்கு கிடைப்பதில்லை? அல்லது தேகத்திலுள்ள சீதோஷ்ணம் அறியப்படுவதுபோல் ஸ்பரிசேந்திரியத்திற்காகிலும் ஏன் அவர் புலப்படுவதில்லை? இவ்வாறு பிரச்னை ஏற்பட்டால் அதற்கு ஸ்ரீகிருஷ்ணர் பதில் கூறுகிறார்.)ஸர்வப்ராணிகள் என்னுடைய சம்பந்தத்தை அடைந்திருப்பினும் த்வகிந்திரியத்தால் என்னை அவர்கள் அறிந்து கொண்டு என்னுடைய தர்மசம்பர்க்கத்தை அவர்கள் அடைந்திருக்கவில்லை. இதற்குக் காரணம் என்னுடைய ஈச்வரஸம்பந்தமான யோகம்தான். அதாவது எண்ணமுடியாததான சக்திதான்.

2. यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥

*யதாகாசஸ்திதோ நித்யம் வாயுஸ்ஸர்வத்ரகோ மகான் 1*
*ததாஸர்வாணி பூதானி மத்ஸ்தானீத்யுபதாரய 11*

(அத்-9, சுலோ-6)

*பகவான் எங்கும் வ்யாப்தராயிருப்பினும் த்வகிந்திரியாதிகளால் அறியப்படாதவனும் பரஸ்பரம் தர்மம் கலந்துகொள்ளுதலில்லாமல் எப்படி இருக்கிறாரென்பதற்கு இது திருஷ்டாந்தம். "ஆகாயத்திலுள்ள மகாவாயு எங்கும் வியாப்தமாயிருப்பினும் அந்தந்த ஸ்தலத்திலுள்ள தர்மஸம்பர்கத்தை எவ்வாறு அடைவதில்லேயோ அப்படியேதான் எல்லா பிராணிகளும் என்னிடமே இருந்தாலும் என்னுடைய தர்மங்களின் சம்பர்க்கமின்றியே இருக்கின்றனவென்று அறி."*

3. अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ॥
नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ॥

*அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தய: 1*
*நாகம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவிருத: 11*

(அத்-7, சுலோ-24—25)

*"இயற்கையாகவே அவ்யக்தஸ்வரூபனாகிய என்னை வ்யக்தனென்று விபரீதஞானிகள் அறிகின்றனர். நான் என்னுடைய அசிந்த்யசக்தியாலும்ஜடப்ரகிருதியாலும்மறைந்தவனுய்ஸர்வஜனங்களின் இந்திரியஞானத்திற்கு விஷயனுவதில்லை." ஓர் திரையின் அப்பாலுள்ள பதார்த்தம் எப்படி புலப்படாதோ அப்படி அவித்யாரூபமாகிய திரையுடன்கூடிய ஜீவர்கள் என்னுடைய அசிந்திய சக்தியால் அவ்யக்தனான என்னை அறியமாட்டார்களென்று தாத்பரியம்.*

4. अव्यक्तोऽयमाचिन्त्योऽयम् ।

*அவ்யக்தோயம் அசிந்த்யோயம் 1* (அத்-2, சுலோ-25)

*"(பரமாத்மா ஜீவனுடன் எப்போதுமிருப்பினும்) அவர் கண்ணிற் புலப்படாதவர், சரீரத்துடன் எங்குமிருப்பவர், அவர் எப்படி*

அதிருச்யனென்றால் அவர் அசிந்த்யன் என்றால் அற்புதமான சக்தியுள்ளவர்.''

5. सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ।

ஸூக்ஷ்மத்வாத்தவிக்ஞேயம் தூரஸ்தம் சாந்திகே ச தத் ।

(அத்-13, சுலோ-16)

''அதிசூக்ஷமனயிருப்பதால் பரபிரம்மன் இந்திரியத்துக்கு எட்டாதவன். அவர் தூரத்திலேயும் சமீபத்திலேயும் இருப்பவர்.''

6 नाहं वेदैर्नतपसा न दानेन न चेज्यया ।
शक्य एवं विधोद्रष्टुं दृष्टवानसि मां यथा ॥
भक्तया त्वनन्यया शक्य अहमेवं विधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्वेन प्रवेष्टुं च परन्तप ॥

நாஹம் வேதைஸ்சதபஸா ந தானேன ந சேஜ்யயா ।
சக்ய ஏவம் விதோத்ரஷ்டும் த்ருஷ்டவானஸி மாம் யதா ॥
பக்த்யாத்வனன்யா சக்யஅஹமேவம் விதோர்ஜுன ।
க்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥

(அத்-11, சுலோ.53—54)

''ஹே அர்ஜுன! என்னை (பக்தியில்லாத) வேதார்த்தஞானத்தாலாகட்டும், தபஸ்ஸாலாகட்டும், தானத்தாலாகட்டும், யக்ஞத்தாலாகட்டும், எப்படி நீ என்னைக்காண்கிறாயோ அப்படிக் காண்பது சாத்யமில்லை. (அப்படியானால் நீ எந்த உபாயத்தால் அதிகாரிகளுக்கு வியக்தனுவாய் என்று கேட்பாயோ, சொல்கிறேன், கேள்.) இதராளிடத்தில் வைக்காத பக்தியால் அபரிமிதமான மகிமையுள்ள என்னையறியவும் காணவும் பிறகு பிரவேசிக்கவும் முடியும்.'' பக்தியால் பிரஸன்னராகி அவ்யக்தரான பகவான் தம்முடைய சொரூபத்தைவியக்தப்படுத்துவரென்று இதனால் நிச்சயமாகிறது.

7. भक्तया मामभिजानाति यावान्यश्चास्मितत्वतः ।
ततो मां तत्वतो ज्ञात्वा विशतेतदनन्तरम् ॥

பக்த்யா மாமபிஜானாதி யாவன்யஸ்சாஸ்மிதத்வத: ।
ததோமாம் தத்வதோ ஞாத்வா விசதே ததனந்தரம் ॥

(அத்-18, சுலோ-55)

"பக்தியால் என்னுடைய யதார்த்தஸ்வரூபத்தை அறியாமல் என்னுடைய தரிசனத்தைப்பெற்று பிறகு முக்தனுகிருன்" என்று இதன் பொருள்.

8. मत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥

மத்ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம்
(அத்-18, சுலோ-62)

"என்னுடைய பிரஸாதத்தாலேயே மிகவும் மேலானதாயுள்ள ஸமாதிஸுகத்தையும் (அதாவது அபரோக்ஷஞானத்தையும்)பிறகு சாசுவதமான முக்திஸ்தானத்தையும் அடைவாய்" பகவான் சம்பூர்ணமாய் அறியமுடியாதவனென்பதை அர்ஜுனனே சொல்லியிருக்கிருர்.

9. नहिते भगवन्व्यक्तिं विदुर्देवानदानवाः ।
स्वयमेवाऽऽत्मनात्मानं वेत्थत्वं पुरुषोत्तम ॥

நஹி தே பகவன் வியக்திம் விதுர்தேவா நதானவா: ।
ஸ்வயமேவாத்மனுத்மானம் வேத்தத்வம் புருஷோத்தம ॥
(அத்-10, சுலோ-14—15)

"ஹே பகவன்! உன்னுடைய ஸாமர்த்தியத்தின் மேன்மையை தேவர்களாகட்டும் (ஞானிகளென பிரசித்தர்களான) பிரஹ்லாதி தைத்யர்களாகட்டும் அறிந்தவர்களன்று. நீர்தான் உம்முடைய ஸாமர்த்தியத்தை இதராளின் அபேக்ஷையன்றி உம்முடைய ஸாமர்த்தியத்தாலேயே அறிந்திருக்கின்றீர்."

10. नास्त्यन्तो विस्तरस्यमे ।

நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்யமே । (அத்-10, சுலோ-19)

"ஹே அர்ஜுனு! என்னுடைய விபூதிரூபங்களில் சிலதுகளைமட்டில் உனக்குச் சொல்லுகிறேன். எல்லாவற்றையும் சொல்லப் புகுந்தால் எவ்வளவு சொன்னுலும் முடிவு ஏற்படாது."

11. नान्तोऽस्ति ममदिव्यानां विभूतीनां परन्तप ।
एषतूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥

*நாந்தோஸ்திமமதிவ்யாநாம் விபூதிநாம் பரந்தப ।*
*ஏஷதூத்தேசத: ப்ரோக்தோ விபூதேர்விஸ்தரோ மயா ॥*

(அத்-10, சுலோ-40)

"என்னுடைய அற்புதமான விபூதிரூபங்களுக்கு முடிவு என்பதில்லை. இப்பொழுது நான் சொன்ன விஸ்தாரமான விபூதிரூபங்கள் குறிப்பாக ஸ்வல்பம்தான்."

**"येत्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते"** (யே'த்வக்ஷரமநிர்தேச்யமவ்யக்தம் பர்யுபாஸதே) **ये चाप्यक्षरमव्यक्तं** (யேசாப்யக்ஷரமவ்யக்தம்) முதலான சுலோகங்களில் மகாலக்ஷ்மிக்கும் அவ்யக்தசப்தத்தால் சொல்லப்படுவது உண்டென்று கண்டிருக்கிறது. ஆனால் லக்ஷ்மீதேவி ஸர்வநியாமகரான பரமாத்மாவுக்கு எப்போதும் வியக்தளாகவே இருக்கிறாளாதலால் பகவானுடைய அனுக்ரஹத்தால் அந்த அம்மாள் தமக்கு அடங்கியவர்களான பிரம்மாதிஜீவர்களுக்கு அவ்யக்தாளாக இருக்கிறாள். ஆகையால் முக்யமாய் அவ்யக்தசப்தத்தால்சொல்லப்படுவது ஸ்வதந்திரரான ஸ்ரீகிருஷ்ணருக்குத்தான் பொருந்தும்.

12. **परस्तस्मात्तुभावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।**
**अव्यक्तोऽक्षरइत्युक्तस्तमाहुः परमां गतिम् ॥**

*பரஸ்தஸ்மாத்து பாவோன்யோ வ்யக்தோ அவ்யக்தாத்ஸநாதன: ।*
*அவ்யக்தோ அக்ஷர இத்யுக்தஸ்தமாஹு: பரமாம்கதிம் ॥*

(அத்-8, சுலோ-20—21)

"அவ்யக்தரென்னும் பெயர்பூண்ட பகவான் வியக்தமான எல்லா பிராணிகளிலிருந்து தனியானவன், ஸ்வதந்திரன், உத்தமன் (அந்த அவ்யக்தன் யாரென்றால்) அக்ஷரனும் அப்படியே (முக்தியில்) முக்யமாய் அடையக்கூடியவனென்று யாரை சொல்கிறார்களோ அப்பேர்ப்பட்டவனும்தான் அவ்யக்தன்." இந்த வாக்யங்களால் மோக்ஷத்தைத் தருகிறவரான வாஸுதேவர்தான் முக்யமாய் அவ்யக்தசப்தத்தால் சொல்லப்படுகிறவரென்று சித்திக்கிறது.

Xxiv அசிந்த்யமான சக்தியானது **ओं आत्मनि चैवं विचित्राश्चहि ओं** (ஓம் ஆத்மனி சைவம் விசித்ராஸ்சஹி ஓம்) **ओं सर्वोपेता च तद्दर्शनात् ओं** (ஓம் ஸர்வோபேதா ச தத்தர்சனாத் ஓம்) முத

லானபிரம்மஸூத்திரங்களிலும் வேதவேதாந்தங்களிலும்ஸர்வோத்தமனான பரபிரம்மத்தினிடம்மட்டில் இருக்கக்கூடிய தர்மமென்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அத்வைதமதத்தில் **अघटना पटीयसी साचाविद्या** (அகடனுபடீயஸீ ஸா சா அவித்யா) என்று சேரமுடியாதவைகளை சேர்த்துவைக்கும் சாமர்த்தியரூபமான அசிந்திய சக்தி அவித்தைக்கிருப்பதாய் அபிப்பிராயப்படுகின்றனர். ஜடமாகிய அவித்தைக்கு இப்பேர்ப்பட்ட அசிந்தியமான சக்தியைச் சொல்வதானல் பிரம்மனுக்கு ஜடத்வம் ஈச்வரனுக்கு விநாசம், கடம் முதலான விநாசமுள்ள பதார்த்தங்களுக்கு நித்யத்வம் அப்படியே சேதனத்வம் இவை முதலான அநேக அஸம்பாவிதமான ப்ரமேயங்களை ஒப்புக்கொள்ளவேண்டி வரும். ஆகவே அத்வைதிகளின் இந்த அபிப்பிராயம் தத்வவிசாரம் செய்யும்பொழுது நிலைநிற்காமற்போய் துர்பலமாய்ப் போவதன் நிமித்தம் தம்முடைய இனத்தார்களின் மனதை திருப்திப்படுத்துவதற்காக இவ்வாறு ஏற்படுத்திக்கொண்டதே ஒழிய சாஸ்திரார்த்தமாகாது.

பகவத்கீதையின் வாக்யங்களால் ஸ்ரீகிருஷ்ணன் தான் தேவர்களாலும் அறியமுடியாததான அற்புத ஐச்வர்யம் படைத்தவனென்று சித்திக்கிறது.

1. **अव्यक्तोऽयमचिन्त्योऽयम् ।**

அவ்யக்தோயமசிந்த்யோயம் ।  (அத்-2, சுலோ-25)

'பரபிரம்மம் அவ்யக்தன் அப்படி அசிந்த்யமான சக்தியுள்ளவன்.'

2. **आश्चर्यवत्पश्यति कश्चिदेन माश्चर्यवद्वदति तथैवचान्यः ।**
**आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेदनचैवकश्चित् ॥**

ஆஸ்சர்யவத்பச்யதி கஸ்சிதேனமாஸ்சர்யவத்வததி ததைவ
சான்ய: ।
ஆஸ்சர்யவச்சைனமன்ய: சுருணோதி சுருத்வாப்யேனம்
வேதநசைவ கஸ்சித் ॥  (அத்-2, சுலோ-29)

"ஸாத்விகனான அதிகாரி (ஸர்வஸ்வதந்திரனான) பரமாத்மா அற்புதனாய் இருப்பதாய் காண்கிறான், மற்றொருவன் இவர்தான் இணையற்றவர், அற்புதர் என்று கூறுகிறான். மற்றொரு

வன் எவ்வளவு கேட்டாலும் இவருடைய மகிமைக்கு முடிவே இல்லை என்று ஆச்சர்யத்துடன் சிரவணம் செய்கிறுன். பகவானுடைய மகிமையை எவ்வளவு சிரவணம் செய்தாலும் அவர் அற்புத வஸ்துவாய் இருப்பதால் சம்பூர்ணமாய் அவர் அறியப்பட முடியாதவர் ''

3. सर्वस्य धातारमाचिन्त्यरूपम् ।

ஸர்வஸ்ய தாதார மசிந்த்யரூபம் । (அத்-8, சுலோ-9)

"பரமாத்மா (அதாவது நான்)......பூராவாய் அறியப்படமுடியாத தான ரூபமுள்ளவன்''

4. उपद्रष्टानुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।

உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தாபோக்தாமகேசுவர: ।

(அத்-13, சுலோ-23)

"பரமாத்மா எல்லோரைவிட அதிகனுய் எல்லாவற்றையும் காண்கிறவன்......மகாசக்தியுடையவன்''

5. समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।
विनश्यस्त्वविनश्यन्तं यः पश्यति सपश्यति ॥

ஸமம்ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேச்வரம் ।
வினச்யஸ்த்வவினச்யந்தம் ய:பச்யதி ஸபச்யதி ॥

(அத்-13, சுலோ-28)

" தாரதம்மியத்துடனுள்ள பிராணிகளிடம் வசிக்கும் அசிந்த்யமான சக்தியுள்ள பரமாத்மாவை ஏற்றத்தாழ்வில்லாதவனென்றும் நாசமடையும் சரீரங்களில் இருந்தாலும் நாசமற்றவனென்றும் அறிபவன் ஞானியாவான்''

இந்த சுலோகத்தில் ஸ்ரீகிருஷ்ணர் பரமேச்வரம் என்னும் சப்தத்தால் தான் இயற்கையாகவே அசிந்த்யமான சக்தியுள்ளவன் என்று சொல்லி அதனுல் அந்த பலத்தால் (1) தான் தாரதம்மியமுள்ள ஜீவராசிகளிடமிருப்பினும் எங்கும் பூர்ணமானகுணமுள்ளவனுகயிருந்துகொண்டு தாரதம்மியமில்லாதவனுயிருப்பதாகவும் (2) தான் வசிக்கும் சரீராதி அதிஷ்டானங்கள் நாசமடைவ

தாயினும் தனக்கு நாசமில்லை என்றும் அவருக்கு அசிந்த்யமான சக்தியிருப்பதை சாதிக்கும் இவ்விரண்டு யுக்திகளை சொல்லியிருக்கிறார். மற்றும் சில யுக்திகளை ஆங்காங்கு சூசித்திருக்கிறார்.

## 6. दूरस्थं चान्तिके च तत् ।

தூரஸ்தம் சாந்திகே ச தத் ॥ (அத்-11, சுலோ-16)

“பரமாத்மா ஒரே ரூபத்தால் ஒரே காலத்தில் வெகு தூரத்திலும் வெகு சமீபத்திலும் இருக்கிறார்” இது அசிந்த்யமான சக்தியின் காரியமாகும்.

## 7. नायं भूत्वा भविता वानभूयः ।

நாயம் பூத்வா பவிதா வா ந பூய: ॥ (அத்-2, சுலோ-20)

பரமாத்மா ராமகிருஷ்ணுநிரூபங்களால் பூர்வம் இருந்தவர்தான் ஸ்ரீராமர் அவதரித்தார், ஸ்ரீகிருஷ்ணர் அவதரித்தாரென்னும் சொல்லுக்கு இடமாகிறார். உண்மையில் ராமரூபமும் கிருஷ்ண ரூபமும் அவதாரத்திற்கு முன்பே அந்த ரூபத்தாலேயே இருந்தனவென்று தாத்பர்யம். அசிந்த்யமான சக்தி இல்லாமற்போனால் இது சாத்தியமாகாது,

## 8. सर्वतः पाणि पादम् ।

ஸர்வத: பாணி பாதம் ॥ (அத்-13, சுலோ-14)

“பரமாத்மா எல்லா அவயவங்களிலும் கைகால்களின் சக்தியைக் கொண்டவர்.” எந்த இந்திரியமும் இதர இந்திரியங்களின் காரியத்தைச் செய்யவல்லது இது அசிந்த்யமான சக்தியால்தான் சாத்தியமானதாகும்.

## 9. श्रोत्रं चक्षुःस्पर्शनं च रसनं घ्राणमेव च ।
## अधिष्टाय मनश्चायं विषयानुपसेवते ॥

ச்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்சனம் ச ரஸனம் க்ராணமேவ ச ॥
அதிஷ்டாயமனஸ்சாயம் விஷயானுபஸேவதே ॥

(அத்-15, சுலோ-9)

"பரிபூர்ணமான ஆனந்தமுள்ள பரமாத்மா ஜீவனுடைய கண், காது முதலிய இந்திரியங்களில் பிரவேசித்து ஜீவன் அனுபவித்த விஷயசுகங்களைமட்டில் ஸ்வீகரிக்கிறார். ஆயினும் அதனால் அவருடைய ஆனந்தத்திற்கு விருத்திமுதலியவைகள் இல்லை. இது பகவானின் அசிந்தியசக்தியால் செய்யப்படும் கார்யமாகும். ஸ்ரீ ஆனந்ததீர்த்தபகவத்பாதாளும்கூட **पूर्णानन्दमयस्यास्य चेष्टा न ज्ञायते क्वचित्** (பூர்ணாநந்தமயஸ்யாஸ்ய சேஷ்டா நக்ஞாயதே க்வசித்) என்று உதாஹரித்திருக்கிறார்.

**10. उत्क्रामन्तं स्थितं वापि भुंजानं वा गुणान्वितम् ।**
**विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥**

உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜானம் வா குணாந்விதம் I
விமூடா நானுபச்யந்தி பச்யாமி ஞானசக்ஷுஷ: II

(அத்-15, சுலோ-10)

"(மரணகாலத்தில்) ஜீவனை எடுத்துக்கொண்டு லோகாந்தரத்திற்கு ப்ரயாணம் செய்பவரும் அப்படியே (ரக்ஷிக்குங்காலத்தில்) ஜீவனிடம் இருந்துகொண்டு சுபத்தைமட்டில் அனுபவிப்பவருமான ஸ்ரீபரமாத்மாவை மூடர்கள் அறியார்கள்; ஞானக்கண் படைத்தவர்கள் அறிவார்கள்," இதனாலும் பரமாத்மாவுக்கு அசிந்திய சக்தியிருப்பது சித்திக்கிறது.

**11. यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ।**

யோலோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர: I

(அத்-15, சுலோ-17)

"பரமாத்மா மூன்று உலகத்தையும் ப்ரவேசித்து உலகமெல்லாம் நாசமடைந்தாலும் தான் நாசமற்றவனாய் அசிந்த்யசக்தியால் தான் ஒருவனே ஸர்வத்தையும் தரித்திருக்கிறார்."

**12 विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ।**

விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னமேகாம்சேன ஸ்திதோ ஜகத் I

(அத்-10, சுலோ-42)

"நான் என்னுடைய ஓர் அம்சத்தால் இந்த எல்லா ஜகத்தையும் வியாபித்துக்கொண்டிருக்கிறேன்."

ஞானசக்ஷுஸ்ஸுள்ளவர் தன்னை அறிந்துகொள்வார்கள் என்று ஸ்ரீகிருஷ்ணர் சொல்லியிருக்கிறார். ஞானசக்ஷுஸ்ஸுள்ள அர்ஜுனனே ஸ்ரீகிருஷ்ணர் அசிந்த்யமான அற்புதசக்தியைக் கொண்டவனென்பதற்கு சாக்ஷி. அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணருடைய திவ்யமான ரூபத்தைக் காட்டும்படி பிரார்த்தித்தபொழுதே அவருடைய அசிந்த்யமான சக்தியை அர்ஜுனன் அறிந்திருக்கிறார்.

13. एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥

ஏவமேதத் யதார்த்தத்வ மாத்மாநம் பரமேச்வர ।
த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம் புருஷோத்தம ॥

(அத்-13, சுலோ-3)

"ஹே புருஷோத்தமா! ஹே பரமேச்வரா! அசிந்த்யமானதும் அற்புதமானதுமான மகாசக்தியுள்ளவரே! நீங்கள் சொல்லிய உங்கள் மகிமை எல்லாமே சத்யம்தான். ஐச்வரம் ரூபம் என்றால் அசிந்த்யமான சக்தியைக்கொண்ட உங்கள் ரூபத்தைப் பார்க்க இச்சிக்கிறேன்." விச்வரூபம் என்பது ஜாலவேடிக்கை செய்பவன் காட்டும் ஜாலவித்தைபோல் விஷ்ணு செய்யும் மாயாவிலாஸமென்று சில மூடர்கள் சொல்கின்றனர். அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணரை உன்னுடைய மாயாரூபத்தைக் காட்டு என்று பிரார்த்தித்துக் கேட்டிருந்து அதன்படி காட்டப்பட்டிருந்த விச்வரூபமாயிருந்தால் அது மாயமானதென்று ஒருக்கால் சொல்லலாம். அர்ஜுனன் கேட்கும்பொழுதே "நீர் மகேச்வரன். உம்முடைய ஐச்வர்ய ரூபத்தைக் காட்டுங்கள்" என்று பிரார்த்தித்திருக்கிறார், மேலும் **योगेश्वर......दर्शयात्मानमव्ययं** (யோகேச்வர..........தர்சயாத்மானமவ்யயம்) ஹே யோகேச்வரா! உங்களுடைய நாசமற்றதான ஸ்வரூபத்தைக் காட்டுங்களென்று கேட்டுக்கொண்டிருக்கிறார். இதனால் ஸ்ரீகிருஷ்ணர் காட்டிய விச்வரூபம் நாசமற்றதான் அவருடைய ஸ்வரூபமென்று நிச்சயமாகிறது. ஸ்ரீ கிருஷ்ணரும்கூட

14. दिव्यं ददामि ते चक्षुः पश्यमेयोगमैश्वरम् ।

திவ்யம்ததாமி தேசக்ஷு: பச்யமே யோகமைச்வரம் ।

(அத்-11, சுலோ-8)

"உனக்கு திவ்யமான சக்ஷுஸ்ஸைக் கொடுத்திருக்கிறேன். என்னுடைய ஈச்வரஸம்பந்தமான அதாவது அசிந்த்யமான ஸாமர்த்தியத்தைப்பார்" என்று சொல்லியுள்ளார். பிறகு

15. दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ।
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைச்வரம் ।
(அத்-11, சுலோ-9)

"அர்ஜுனனுக்கு தம்முடைய பரமம் யதார்த்தமானதும் அதாவது மாயமாயில்லாததும் ஐச்வரம் அசிந்த்யமான அற்புதசக்தியுடன் கூடியதும் பூர்ணமாயுள்ளதுமான விச்வரூபத்தைக் காட்டினார்." அர்ஜுனனுக்கும் ஸ்ரீகிருஷ்ணருக்கும் நடந்த இந்த ஸம்பாஷணையை பரிசீலனை செய்தாலே பகவானுடைய விச்வரூபம் மாயமானது அல்லவென்று ஏற்படும். மாயமான ரூபத்தைப்பார்க்க இப்போது நமக்குள்ள கண்ணின் பார்வை தோஷாதிகளால் மங்கவேண்டும். அல்லது அதற்கிணையானதைப் பார்த்தோ வேறு ஏதாவது காரணத்தாலோ அதன் பார்வை தளரவேண்டும். அதற்காக திவ்யமானதும் அதாவது லோகவிலக்ஷணமானதும் இந்திரியத்திற்கு எட்டாததுமான பதார்த்தங்களைக் காணும் பார்வை தேவையில்லை. மாயமான பதார்த்தங்களைப் பார்க்க தோஷமுள்ள பார்வை வேண்டுமேயல்லாது திவ்யமான பார்வை ஒருக்காலும் தேவையில்லை. தோஷமுள்ள கண்ணுக்கு ஏன் ஸாமான்ய கண்ணுக்குங்கூட தம்முடைய லோகவிலக்ஷணமான மாகாத்மியம் புலப்படாதென்றே ஸ்ரீ கிருஷ்ணர் दिव्यं ददामि ते चक्षुः (திவ்யம் ததாமி தே சக்ஷு:) என்று ப்ரதிக்ஞை செய்து தம்முடைய परमं रूपमैश्वरं (பரமம் ரூபமைச்வரம்) உத்தமமானதும் அசிந்த்யமானதுமான மாகாத்மியத்துடன் கூடிய ரூபத்தைக் காட்டியிருக்கிறார். இப்பேர்ப்பட்ட திவ்யமான பார்வை ஏற்பட்டதால்தான் துர்யோதனாதிகள் தங்கள் ஸபையில் ஸ்ரீகிருஷ்ணருடைய விசுவரூபத்தைப் பார்த்துவிட்டு பின் தயங்கினரென மகாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. திவ்யக்கண்ணைப் பெற்றபின் அர்ஜுனன் அந்த ரூபம் அசிந்த்யமான மகிமையுடன் கூடியதென்றே அறிந்தான்.

16. अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
दिव्यमाल्यांबरधरं दिव्यगन्धानुलेपनम् ॥
सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतो मुखम् ॥

அநேகவக்த்ரநயனமநேகாத்புத தர்சனம் ।
திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தானுலேபனம் ।
ஸர்வாஸ்சர்யமயம் தேவமனந்தம் விச்வதோமுகம் ।
(அத்-11, சுலோ-11)

"அநந்தமான வாய்கள், அநந்தமான கண்கள் அநந்தமானவைகளும் ஆச்சரியமானவைகளும் பார்க்கத்தகுந்தவைகளுமான ரூபங்கள் இவைகளைக்கொண்டதும் திவ்யமான அதாவது ஸ்வரூபபூதமான ஹாரம் வஸ்திரங்கள் இவைகளை தரித்ததும் ஸ்வரூபபூதமான சந்தனம் பூசிக்கொண்டதும் ஸர்வாச்சர்யமயமாயுள்ளதும் விச்வதோமுகமாயுள்ளதும் அநந்தமாயுள்ளதும் க்ரீடாதிகுணங்கள் கூடியதாயுமுள்ளதுமான விச்வரூபத்தை" அர்ஜுனர் கண்டான். மாயையாலுண்டான பதார்த்தத்திற்கு மகாதேஜஸ்ஸு எப்படி வரக்கூடும்? அந்தகாரம்தானே மாயாநிர்மாணத்திற்கு பலமாயுள்ளது. விச்வரூபமோ அநந்தசூர்யகாந்தியுடன் கூடியது.

17. दिव्य सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशीसास्याद्भासस्तस्यमहात्मनः ॥

திவ்யஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபத துத்திதா ।
யதிபா: ஸத்ருசீ ஸாஸ்யாத் பாஸஸ்தஸ்ய மகாத்மன: ॥
(அத்-11, சுலோ-12)

तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥

தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம் பாஸஸ்தவோக்ரா: ப்ரத
பந்திவிஷ்ணோ । (அத்-11, சுலோ-30)

"அந்தரிக்ஷலோகத்தில் ஒரேகாலத்தில் அநந்தசூர்யர்கள் உதித்தால் எவ்வளவு காந்தி வியக்தமாகுமோ அந்த காந்தி அந்த விச்வரூபத்தைத்தாங்கிய ஸ்ரீஹரியின் சரீரகாந்திக்கு இணையானாலும் ஆகலாம். ஹே விஷ்ணோ! உம்முடைய தீக்ஷிண்யமான காந்தி பிரகாசப்படுத்துவதான உம்முடைய சக்தியால் ஸகல பிரபஞ்சத்தையும் வியாபித்து கொளுத்துகிறது."

மேலும் இந்த விச்வரூபம் எல்லா ஞானிகளுக்கும் அப்படியே முக்தர்களுக்கும் கண்ணிற்கு தென்படுவதாக இருந்துவருகிறது. யதார்த்தஞானிகளான தேவர்களாலும் முக்தர்களாலும் காணப்படும் ரூபம் மாயையால் உண்டானதாய் இருக்காது.

18. दृष्ट्वाद्भुतं रूपमुग्रंतवेदं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ।
अमीहि त्वां सुरसंघा विशन्ति केचिद्भीताः प्रांजलयोःगृणन्ति ॥
गंधर्वयक्षासुर सित्धसंघावीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥

திருஷ்ட்வாத்புதம் ரூபமுக்ரம்தவேதம் லோகத்ரயம் ப்ரவ்ய திதம் மகாத்மன் । அமீஹித்வாம் ஸுரஸங்கா விசந்தி கேசித் பீதா: ப்ராஞ்ஜலயோ கிருணந்தி ॥ கந்தர்வயக்ஷாஸுரஸித் தஸங்கா வீக்ஷந்தேத்வாம்விஸ்மிதாஸ்சைவ ஸர்வே ॥

(அத்-11, சுலோ-22)

"ஹே மகாத்மாவே! உம்முடைய அற்புதமானதும் உக்ரமானது மான ரூபத்தைப்பார்த்து மூன்று லோகமும் சங்கடமடைந்திருக் கிறது. முக்தாமுக்தர்களான எல்லா தேவதைகளும் உமக்குள் பிரவேசித்திருக்கின்றனர். அவர்களில் சிலர் (அமுக்தர்கள்)பயப் பட்டவர்களாகி உம்மை அஞ்சலிபந்தத்துடன் துதிக்கின்றனர். கந்தர்வர்கள் யக்ஷர்கள் முதலான எல்லா தேவசமூகமும் ஆச்சரி யப்பட்டவர்களாய் உம்மை காண்கின்றனர்."

உலகில் துர்பலனுயுள்ள இந்திரஜாலவித்தைக்காரன் சபையி லுள்ளோருக்கு இஷ்டமான பதார்த்தங்களை உண்மையாய் அச் சமயம் நிர்மாணம் செய்துகொடுக்க சாமர்த்தியம் பெற்றிராதிருப் பதால் இந்திரஜாலமாகிய ஓர் மாயையைத் துணையாகக்கொள்கி ருன். பரமாத்மாவுக்கு இயற்கையாக அசிந்த்யமான பலமே இருப்பதால் அவர் அற்புதமான ரூபத்தைக் காட்டுவது அவரிட மே நிலையாயுள்ள ரூபத்தின் வெளியாதலேயன்றி அச்சமயத்தில் தான் இயற்றிய மாயாசிருஷ்டியன்று.

19. अनन्तवीर्यामितविक्रमस्त्वम् ॥

அநந்தவீர்யாமிதவிக்ரமஸ்தவம் । (அத்-11, சுலோ-40)

'ஹேஸ்வாமி! நீர்அபரிமிதமான பலபராக்ரமத்தைக்கொண்டவர்.' ஆகையால்தான் அசிந்த்யமானதும் ஸ்வரூபபூதமானதுமான மகிமையுடன் கூடிய பகவானை எந்த லௌகிகமான உபாயங்களா லும் வசப்படுத்துவது சாத்தியமில்லையென்றறிந்து அடிமைபுத்தி யுடன் அர்ஜுனன் நமஸ்காரம் செய்திருக்கிருர்.

20. **नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्चभूयोऽपिनमोनमस्ते ।
नमः पुरस्तादथपृष्ठतस्ते नमोऽस्तुते सर्वतएवसर्व ॥**

நமோநமஸ்தேஸ்து ஸஹஸ்ரகிருத்வ: புனஸ்சபூயோபி நமோ நமஸ்தே I நம:புரஸ்தாதத பிருஷ்டதஸ்தே நமோஸ்துதே ஸர்வத ஏவஸர்வ II (அத்-11, சுலோ-40)

"ஹே ஸ்வாமி! உமக்கு நமஸ்காரம், உமக்கு திரும்பித்திரும்பி நமஸ்காரம். கீழ்புரத்திலும் மேல்புரத்திலும் தென்புரத்திலும் வடபுரத்திலும் முன்னேயும் பின்னேயும் மேலேயும் கீழேயும் எங்கு பார்த்தாலும் அங்கு வியாப்தனுயுள்ள உமக்கு நமஸ்காரம்."

பகவானுடைய அசிந்த்யசக்தி அவித்தைமுதலான உபாதிகளால் உண்டான மாயாபலமன்றென்றும் ஸ்வரூபபூதமான ஸாமர்த்யம்தானென்றும் ஸ்ரீகிருஷ்ணரே விச்வரூபத்தைச் சுருக்கிக் கொள்ளும்பொழுது நிரூபணம் செய்திருக்கிறார்.

21. **मयाप्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं...............॥**

மயாப்ரஸன்னேன தவார்ஜுனேதம் ரூபம் பரம் தர்சித மாத்மயோகாத் I தேஜோமயம் விச்வமனந்தமாத்யம்......I
(அத்-11, சுலோ-47)

"ஹே அர்ஜுன! உன்னிடம் அனுக்ரஹம் செய்திருக்கும் என்னால் 'ஆத்மயோகாத்=என்னுடைய ஸ்வரூபஸாமர்த்தியத்தால் தேஜோமயமானதும் பூர்ணமானதும் அபரிச்சின்னமானதும் ஜகத்முதலியவைகளுக்கு காரணமானதுமான இந்த ரூபம் உனக்காகக் காண்பிவிக்கப்பட்டது."

மேலும் பொய்யானகாக்ஷியைக்காண உக்ரமான தவத்தைச் செய்யவேண்டியதில்லை. விச்வரூபமோவெனில் 'ஸுதுர்தர்சம்' என்று பகவானே கூறியிருக்கிறார்.

22. **सुदुर्दर्शमिदं रूपं ॥**
ஸுதுர்தர்சமிதம் ரூபம் I (அத்-11, சுலோ-52)

**भक्त्या त्वनन्यया शक्य अहमेवं विधोऽर्जुन । ज्ञातुं द्रष्टुं ॥**

பக்த்யாத்வநன்யாசக்ய அஹமேவம் விதோர்ஜுன ।
க்ஞாதும் த்ரஷ்டும் ॥ (அத்-11, சுலோ-54)

"அர்ஜுனா! ஸுலபமாயுள்ள உபாயங்களால் என்னுடைய ரூபத்தைக்காணமுடியாது. இதராளிடத்திலில்லாத பக்தியால்தான் இப்பேர்ப்பட்ட விச்வரூபியாகிய நான் அறியப்படத்தகுந்தவன்."

யுத்தம்முடிந்தபின்பும் ஸஞ்ஜயனுக்கு விச்வரூபத்தைக்கண்டதால் உண்டான ஆனந்தம் குறைவடையவில்லை.

23. तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।
विस्मयो मे महान् राजन् हृष्यामि च पुनः पुनः ॥

தச்சஸம்ஸ்மிருத்ய ஸம்ஸ்மிருத்ய ரூபமத்யத்புதம் ஹரே: ।
விஸ்மயோ மே மஹான் ராஜன் ஹிருஷ்யாமிச புன: புன: ॥
(அத்-18, சுலோ-77)

"ஹே திருதராஷ்டிரனே! ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனன் இவர்களின் சம்வாதத்தின் ஸ்மரணையால் எனக்கு அடிக்கடி சந்தோஷமுண்டாகிறது. மேலும் ஸ்ரீஹரியினுடைய பரமாச்சர்யமான அந்த விச்வரூபத்தை அடிக்கடி எண்ணி எனக்கு மகத்தான ஆச்சரியமுண்டாயிற்று. புன: இப்பவும் அதை எண்ணி நான் ஆனந்தப்படுகிறேன்."

**योगेश्वरात् कृष्णात्** (யோகேச்வராத் கிருஷ்ணத்) என்று ஸஞ்ஜயன் பூர்வசுலோகத்தில் சொல்லி கடைசி சுலோகத்திலும் ஸ்ரீகிருஷ்ணருடைய ஸ்வரூபத்தை ஸங்ரஹமாய் வர்ணிக்கிறார்.

24. यत्रयोगेश्वरः कृष्णः यत्रपार्थोधनुर्धरः ।
तत्रश्रीर्विजयो भूतिर्ध्रुवानीतिर्मतिर्मम ॥

யத்ரயோகேச்வர: கிருஷ்ண: யத்ரபார்த்தோதனுர்தர: ।
தத்ரஸ்ரீர்விஜயோபூதி: துருவாநீதிர் மதிர்மம ॥
(அத்-18, சுலோ-78)

"அசிந்த்யாற்புதமான சக்தியைக் கொண்டிருக்கும் ஸர்வேசுவரனை ஸ்ரீகிருஷ்ணன் (எந்த சைன்யத்தில்) இருக்கிறாரோ, (அவரை ஆசிரயித்த) காண்டீவதனுர்த்தாரியான அர்ஜுனன் எங்கிருக்கி

ரூமோ அங்குதான் ராஜ்யலக்ஷ்மியும் ஜயமும் ஸம்பத்தும் நீதியும் நிச்சலமாய் இருக்கிறதென்று என்னுடைய தீர்மானம்."

ஸ்ரீகிருஷ்ணருடைய அசிந்த்யமானசக்தி குருக்ஷேத்திரத்தில் நடந்த யுத்தத்தின் விருத்தாந்தத்தாலேயே தெரியவரும். ஆயுதம் தரித்திராத ஸ்ரீ கிருஷ்ணனையண்டி ஸ்வல்பஸைன்யங்களுடன் கூடிய பாண்டவர்கள் ஜயம்பெற்றனர். ஸர்வாயுதங்களையும் தரித்திருந்த நாராயணுளென்னும் ஒருலக்ஷஸைன்யத்தையும் ஸ்ரீகிருஷ்ணரிடமிருந்து பெற்று அதிகமான ஸைன்யங்களைக் கொண்டிருந்தும் துர்யோதனன் துர்கதியையே அடைந்தான். அசிந்த்யமான ஸாமர்த்தியமுள்ள ஸ்ரீகிருஷ்ணரை நம்பியவர்களுக்கும் அவரவர்களின் யோக்யதைப்படி அசிந்த்யமான சக்தி ஏற்படுகிறதென்று **यत्रपार्थो धनुर्धरः** (யத்ரபார்த்தோ தனுர்தர:) என்ற பாகத்தால் ஸஞ்ஜயன் குறிப்பிட்டிருக்கிறுர். இப்படியிருக்க யோகிகளுக்கு ஈசனுன ஸ்ரீகிருஷ்ணரின் ஸாமர்த்தியம் எவ்வளவென்று சொல்ல முடியும்.

இவை முதலிய அநேக யுக்திகளால் விஷ்ணுவின் ஸர்வோத்தமத்வம் வேதாந்தஸூத்ரங்களிலேயும் பகவத்கீதையிலேயும் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. யுக்திகள் ஏராளமாய் இருந்தால் என்ன? ஞானிகளின் ஆசரணை ஒன்றே விஷ்ணுதான்ஸர்வோத்தமரென்பதை அறிவிக்க முக்ய யுக்தியாகும். **अहमात्मागुडाकेश** (அஹமாத்மாகுடாகேச)என்று ஸ்ரீகிருஷ்ணர் சொன்ன வார்த்தையாலும் **परंब्रह्म** (பரம்ப்ரம்ம) என்று அர்ஜுனன்செய்த ஸ்தோத்திரத்தாலும் ஸ்ரீகிருஷ்ணர்தான் பரப்ரம்மமென்றும் ஏற்படுகிறது. இப்பேற்பட்ட ஆத்மாவை தரிசித்த ஞானிகள் எல்லா லௌகிக விஷயங்களை துருர்பாக பாவித்திருக்கின்றனர்.

25. **यस्त्वात्मरतिरेवस्यादात्मतृप्तश्च मानवः ।**
**आत्मन्येव चसंतुष्टस्तस्यकार्यं न विद्यते ॥**
**नैवतस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।**
**नचास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥**

யஸ்த்வாத்மரதிரேவஸ்யாதாத்மத்ருப்தஸ்ச மானவ: I
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் நவித்யதே II

நைவதஸ்யகிருதேனார்த்தோ நாகிருதேனேஹகஸ்சன I
நசாஸ்யஸர்வபூதேஷு கஸ்சிதர்த்தவ்யபாச்ரய: II
(அத்-3, சுலோ-17—18)

"எவனொருவன் பரமாத்மாவின் தரிசனத்தாலேயே உண்டான சுகமுள்ளவனாய் வேறிடத்தில் ஈடுபட்டவனன்றோ பரமாத்மாவின் ப்ரஸாதத்தால் (பரமாத்மாவின் தரிசனத்தாலுண்டான சுகமுள்ளவனாய் இருப்பதன்நிமித்தம்) வேறு விஷயங்களில் அலம்புத்திபோதுமென்ற எண்ணம் உள்ளவனோ அப்பேர்ப்பட்ட அஸம்ப்ரக்ஞாதஸமாதியிலுள்ளவன் செய்யவேண்டிய காரியம் யாதொன்றுமிருப்பதில்லை. அஸம்ப்ரக்ஞாதஸமாதியிலுள்ளவன் தன்னுடைய சமாதியைவிட்டு ஆசரணை செய்யும் யக்ஞாதிகளால் எந்த ப்ரயோஜனமும் உண்டாவதில்லை. (பரமாத்மாவின் தரிசனத்திற்காகவேண்டி யக்ஞாதிகளை ஆசரிக்கவேண்டியதாகும். ஸர்வ கர்மாக்களுக்கும் பலமாகிய பரமாத்மாவின் தரிசனமே கிடைத்து வரும்பொழுது அதைவிட்டு வேறு எந்த பலனுக்காக யக்ஞாதிகளை ஆசரிக்கவேண்டுமோ? பரமாத்மாவின் தரிசனத்தைவிட உத்தமமானபலமில்லை என்பதுதான்கருத்து.) அஸம்ப்ரக்ஞாதஸமாதியிலுள்ளவனுக்கு ஸந்தியாவந்தனம் முதலான நித்யகர்மங்களை விடுவதாலும் பாபமில்லை. அவன் குரு தெய்வம் முதலானவர்களை தரிசிப்பது வந்தனம்செய்வதுசம்பாஷிப்பதுமுதலியவைகளால் அவன் அனுபவித்துவருவதாயுள்ள பிரம்மதரிசனத்தாலுண்டான ஆனந்தத்தின் லாபத்தைவிட மேலானதான லாபம் அவனுக்கில்லவே இல்லை. ஆராவது அத்யாயத்தில் ஸ்ரீகிருஷ்ணர் அவ்வாறுதான் சொல்லியிருக்கிறார்.

यं लब्ध्वा चापरं लाभं मन्यन्ते नाधिकं ततः ।

யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யந்தே நாதிகம் தத: I
(அத்-6, சுலோ-22)

"பரமாத்மாவின் தரிசனத்தைக்கொடுக்கும் த்யானயோகத்தை அடைந்தபிறகு அதைவிட மேலானதான லாபமொன்று இருப்பதாய் அதிகாரி அறிவதில்லை." இந்த வாக்யங்களால் பரமாத்மாவின் தரிசனம்தான் ஸர்வோத்தமமான லாபமென்று நிச்சயமாவதால் பரமாத்மாதான் ஸர்வோத்தமவஸ்துவென்றும் அவருடைய

தரிசனத்தாலுண்டாகும் ஸுகம்தான் ஸர்வோத்தமமான ஸுக மென்றும் கைமுத்யநியாயத்தால் சித்தமாகிறது.

இவ்வாறு ஆப்ததமரும் ஸர்வக்ஞசிகாமணியும் ஸாக்ஷாத் ஜகத்குருவுமான ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா அதிகாரிகளில் சிரேஷ்ட னும் மகாபரிசுத்தனும் பக்தியால் சரணாகதனும் தன் சிஷ்யனு மான அர்ஜுனனுக்கு பெரிய தர்மசங்கடம் நேர்ந்தகாலத்தில் **इमं विवस्वते योगं** (இமம் விவஸ்வதே யோகம்) முதலான சுலோ கங்களில் சொன்னபடி உபதேசம் செய்துவந்த ப்ராசீனமதமும் வேதஸம்மதமானதுமான இந்த பிரம்மவித்யை, ஸ்ரீகிருஷ்ணர் தான் பரபிரம்மம், அவர்தான் எல்லா வேதங்களில் சொல்லப்பட் டிருப்பவர், அவர்தான் முக்தியைத்தருபவர், அவரிடமிருந்து தனி மையாயுள்ள எல்லா பிராணிகளின் சமூகமும் அவருடைய அநந்த மான அம்சங்களில் ஏகதேசமான பலத்தைத்தான் கொண்டிருப் பதால் அவர்தான் ஸர்வோத்தமர் என்று பலவகையாய் ஸ்பஷ்ட மாய் எல்லாவகை விமரிசைகாரர்களுக்கும் மனதிற் பதியுமாறு அடிக்கடி அறிவித்திருக்கிறது. ஸ்த்யமாயுள்ள இந்த ஜகத்துக்கு நியாமகரும் அல்பர்களான ஜீவர்களுக்கு நிரவதிகஸ்வாமியுமான ஸ்ரீவாஸுதேவன் ஸ்ரீபகவத்கீதையின் மொழிகளாகிய ஸிம்ஹா ஸனத்தில் வீற்றிருந்து விளங்குகிறார். இப்படியிருக்க பிறவிக் குருடருக்கு சூரியனின்னொளி காணப்படாப்போலும், பாறுங்கல் லுக்கு சந்திரகாந்தியின் ஆனந்தமுண்டாகாப்போலும், துஷ்ட யுக்திகள் பதிந்துபோய் பரம்பரையாயுள்ள உபதேசம் பெறாத சரியான போதனையற்ற புத்தியுள்ளவர்களுக்கு ஸ்ரீபகவானின் இந்த வாக்யங்கள் சரியானபடி அர்த்தமாகாமற்போவதுடன் இந்த பகவத்கீதை பலவகை மதங்களை அறிவித்துக்காட்டுவதா யுள்ள பரஸ்பரம் விருத்தமான வாக்யங்களின்திரட்டாகவும், கர்மங் களை எல்லாம் விட்டொழிக்கும்படி நிரூபிக்கும் அவதூதவித்தை யாகவும், ஸம்ஸாரத்திலேயே பிரவிருத்திக்கும்படி உத்கோஷிக்கும் கிருகஸ்த உபந்யாஸமாகவும், நிரூபிக்கமுடியாத அவித்தையின் ப்ரபாவத்தால் மறந்துபோன ஜீவசைதன்யத்திற்கு பிரம்மத்வத்தை ஞாபகப்படுத்தும் விக்ஞாபனபத்திரிகையாகவும், இப்படி பலவகை யாய்த்தான் காணப்படுமேயல்லாது அவித்தையாகிற திரையால் மறைக்கப்பட்டுப்போனதிருஷ்டியுள்ள மந்தமான ஜீவர்களின் துக் கநிவிருத்திக்காக, நித்யமுக்தன், நித்யாநந்தஸ்வரூபன், அனந்த

கல்யாணகுணகணபூர்ணன், வேதவேதாங்கங்களெ
டைய ராஜ்யமாகிய திவ்யசக்ராதிபத்யத்தின் சக்ரவ
அமர்ந்தவனுன அந்த பகவான் ஸ்ரீலக்ஷ்மீபதியி
தமத்தன்மையை செவ்வனே எடுத்துக்காட்டும் தத்வ
பெரும் பிரகாசமென்று தோன்றமாட்டாதுதான். ஆ
கிரணங்களால் கமலம் மலருவதுபோலவும் சந்திரகா
ணங்களின்ஸ்பரிசத்தால் உருகி மிருதுவாவதுபோலு
நஸ்ஸுள்ள ஸாதுஜனங்கள் ஆனந்தஸாகரனுகிய ஸ்ரீ
தியின் மதுரமான வாக்குகளடங்கி மிகவும் மனோக
வத்தை அறிந்துகொண்டு புத்தியின் விசாலத்தைட்
வெள்ளம் பெருகியபாவனையுடன் பார்த்தஸாரதியாவ
னின் சரணதளிர்களில் சித்தம் ஈடுபட்டு அந்த
டைய மகாப்ரஸாதத்திற்கு பாத்திரர்களாகி ஸம்ஸா
போக்கி நித்யஸுகத்தைப் பெறுவார்களென்பதில்
யில்லை.

ஸ்ரீமத்பரமஹம்ஸபரிவ்ராஜகாசாரியாளா
ஸ்ரீ ஸத்யத்யானதீர்த்த ஸ்ரீ ஸ்வாமிகளியற்றிய கீத
ஸ்ரீவிஷ்ணுஸர்வோத்தமத்வ ஸமர்த்தனம
முதலாவது ப்ரகரணம் முடிந்தது.
ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

